# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி




ஓவியம்: பி. கிருஷ்ணமூர்த்தி

## அன்று வேறு கிழமை

நிழலுக்காகப் பாடையின் கீழ்
பதுங்கிப் போச்சு நாயொன்று.

பதுங்கிப் போன நாய் வயிற்றில்
கிழக்குக் கோடிப் பிணந்தூக்கி
காலால் உதைத்தான். நாய் நகர
மேற்குக் கோடிப் பிணந்தூக்கி
எட்டி உதைத்தான். அது நகர
தெற்குக் கோடிப் பிணந்தூக்கி
தானும் உதைத்தான். அது விலக
வடக்குக் கோடிப் பிணந்தூக்கி
முந்தி உதைத்தான். இடக்கால்கள்
எட்டா நிலையில் மையத்தில்
பதுங்கிப் போச்சு நாய் ஒடுங்கி.

நான்கு பேரும் இடக்காலை
நடுவில் நீட்டப் பெரும்பாடை
நழுவித் தெருவில் விழுந்துவிட
ஓட்டம் பிடித்து, அவர் மீண்டும்
பாடை தூக்கப் பாடையின் கீழ்
பதுங்கிப் போச்சு நாய் மீண்டும்.

—ஞானக்கூத்தன்


1 தேவடி தெரு

சென்னை 4

மார்ச் 1971

30 காசு

6

# புதுக்கவிதை



**சார்வாகன்**

ஆரம்பத்தில் உங்களுக்கு ஒன்று சொல்லிவிட விரும்புகிறேன். இக்கட்டுரையில் நீங்கள் என்னிடமிருந்து ஆழ்ந்த ஆராய்ச்சியையோ, அலசியெடுத்துத் தீர்ந்த விமர்சனத்தையோ, புதுக் கவிதைகளின் தராதர மதிப்பீடுகளையோ தயவு செய்து எதிர்பார்க்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். ஏனென்றால் நான் ஓர் ஆராய்ச்சியாளனோ அல்லது விமர்சன கர்த்தாவோ அல்ல. மாறாக, நான் ஒரு படைப்பாளன். எனக்குக் கவிதையெழுதுவதில் விருப்பமே தவிர அதைப் பற்றி அதிகம் பேசவோ எழுதவோ ஆசை அவ்வளவு இல்லை. இதனால் எனக்கும் ஆராய்ச்சிக்கும் விமர்சனத்துக்கும் பகையென்று அர்த்தமில்லை. பகையில்லை யென்பது மாத்திரமல்ல, இவற்றை நான் வரவேற்பவன்தான். ஆனால் இத்துறைகளில் எனக்கு அதிகம் ஈடுபாடு இல்லை. இததுறைகளில் இறங்குவதாகவும் நான் இல்லை ஆகவே என்னுடைய இந்தப் பேச்சில் புதுக் கவிதையான தோற்றத்தைப் பற்றியோ, இது கவிதையா, புதுசா என்ற விஷயங்களைப் பற்றியோ நான் ரொம்பச் சொல்லப் போவதில்லை. இந்த விஷயங்களெல்லாம் என்னைப் பொறுத்தவரை ரெண்டாம் பக்ஷமான, மூணாம் பக்ஷமான, அவ்வளவு ருசிக்காத சமாசாரங்கள். புதுக்கவிதையென்று ஒன்று இருக்கிறது, அம்முயற்சியில் நானும் சிறிதளவு ஈடுபடுகிறவன் என்பது என்னுடைய பேச்சின் பின்னணி.

நல்லதோ கெட்டதோ 'புதுக்கவிதை' என்ற பெயர் இப்படைப்புக்களுக்கு வந்து ஒட்டிக்கொண்டு விட்டிருக்கிறது. 'கவிதை' யென்றால் இன்னின்ன அங்க லக்ஷணங்கள் இருக்க வேண்டும் என்று வரையறை செய்து கொண்டவர்கள், வரையறை தெரிந்தவர்கள், இப்படைப்புக்களைப் பார்த்துவிட்டு முகஞ் சுளிக்கிறார்கள், நெற்றிக் கண்ணைத் திறக்கிறார்கள், வரையறைக்குள் இது அடங்கவில்லையென்று இது கவிதையா இல்லையா என்பது கவிதை என்கிற சொல்லை பற்றிக்கொண்டு நடக்கிற வாதமாகத்தான் எனக்குப் படுகிறது. இது கவிதையுமில்லை, புதுசுமில்லை என்று சொன்னால் அதனால் பிரமாத நஷ்டம் ஏற்பட்டுவிடப் போவதில்லை. பெயரைப் பற்றி எனக்கு அக்கரையில்லை. வேறு பெயர் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். தற்போது இது புதுக் கவிதை; சிறுகதையல்ல, இசைப் பாடலல்ல, நாடகமல்ல, கட்டுரையல்ல.

மனிதன் ஒரு விநோதமான பிராணி. கனவு காண்கிறவன். தன் கனவுகளை மொழியின் வாயிலாகக் குறித்து வைப்பவன். இதில் அதிசயம் என்னவென்றால் அவன் கனவுகளில் பல, நாள்பட, நனவாக மாறி விடுகின்றன! இக் கனவுகளில், கனவுப் பார்வைகளில் ஒரு கோணம் கவிதை.

கவிதை கனவுமாத்திரமல்ல. கனவுப் பார்வை மாத்திரமல்ல. கனவு காணும் மனசின் வாழ்வு. அவ் வாழ்வின் மொழிவழி யொழுகும் வெளியீடு.

மனித ஜாதியின் வாழ்க்கை தனக்குத்தானே வகுத்துக்கொண்ட கட்டுதிட்டங்களை மீறி அணையுடைத்த வெள்ளம் போலப் பெருகி ஓடிக்கொண்டு வருகிறது. மேலும் பெருக்கெடுத்தோடப் பார்க்கிறது. மனிதன் தனக்குள் தான் ஏற்படுத்தி வைத்துக் கொண்ட கட்டுப்பாடுகள், வழி வழி வந்த மரபுகள், எல்லாம் ஒவ்வொன்றாகத் தகரத் தொடங்கியிருக்கின்றன. தன் சரித்திரத்திலேயே அனுபவித்தறியாத சுதந்திரத்தைப் பலவேறு துறைகளில் தன் அறிவாலும் செயலாலும் அவன் இன்று அநுபவித்து வருகிறான். மேலும் அநுபவிக்கப் போகிறான். இதில் ஒரு அலை புதுக் கவிதை.

கலை, கலைப் படைப்பு, அதில் ஒன்றான இலக்கியம், அதில் ஒன்றான கவிதை—இவையெல்லாம் மனித வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையவை. ஆதி காலத்தில் எப்படி யெப்படியோ துவங்கி, பின்னால் எப்படி யெப்படியோ வளர்ந்து பிரிந்து சேர்ந்து இன்னும் மாறிக் கொண்டிருப்பவை. வரம்பொன்று கட்டி இதுதான் இது என்று நம்புகிற, சொல்கிற, காலம் போய்விட்டது. இன்றைக்கு வாழ்வும் அதன் ஒரு பகுதியான கலையும் மேலும்மேலும் சிக்கலாகி, கிளையும் விழுதும் வேரும் இலையும் பூவும் காயும் விட்டு சிறிய விதை பெரிய ஆலமரமாகினாற்போல ஆகி வருகிற போது, நான் ஓரளவுதான் வரையறைகளுக்கு மதிப்புக் கொடுக்க முடியும். இதில் ஒரு அலை புதுக் கவிதை.

இதுவரை 'கவிதை' யென்பதற்குரியதாயிருந்த சட்டங்களை மீறி வெடித்துப் புரள்கிறது. புதுக்கவிதை ஒருவர் சொல்வது போல,

> ''யாப்புடைத்த கவிதை
>
> அணையுடைத்த காவிரி
>
> முகிலுடைத்த மாமழை
>
> முரட்டுத் தோலுரித்த பலாச்சுளை''

இம்மாதிரிப் புதுமைகளில், சோதனைகளில், ஆபத்துண்டு என்பது எனக்குத் தெரிகிறது. ஆனால் எதில் தான் ஆபத்தில்லை? சும்மா இருந்தால்கூட ஆபத்துண்டு உயிர் செத்துப் போகும். ஆபத்து நேரலாம் என்பதற்காகக் கைகட்டி வாய்பொத்திக் கண்மூடிக் காதடைத்து மனிதன் இருந்திருந்தால், பத்து லக்ஷம் வருஷங்களுக்கு முன் இருந்த மாதிரியே இன்றைக்கும் மரத்தின் மேலேயே இருந்திருப்பான். நல்ல வேளையாக மனித சுபாவம் இப்படியில்லை. இதில் ஒரு அலை புதுக்கவிதை.

புதுக்கவிதைக்கு என்ன லக்ஷணங்கள் என்று சிலர் கேட்கிறார்கள். இந்தக் கேள்வி எனக்குப் புரிவதில்லை. ஒரு கவிஞர் சொன்னபடி,

> ''யாப்பற்ற கவிதை
> அருவருக்கும் அலியல்ல
> வறட்டுக் கோஷா எறிந்த மங்கை
> மார்கழியின் மொட்டிரவில்
> தென்றல் தரும் சூடு போக்க
> வெண்ணிலவின் பயன் துய்க்க
> உடை கலைந்த ஒரு தலைவி.''

உடை கலைந்தாலும் கலையாவிட்டாலும் உள்ளேயிருக்கும் தலைவி ஒன்றுதான். கவிதைக்குரிய அடிப்படைகள்தான் புதுக் கவிதைக்கும். கொஞ்சமாகவோ அதிகமாகவோ புதுசாக இருக்கலாம். அவ்வளவுதான்.

மனிதன் புறவுலகத்தையும் பிற மனிதர்களின் செயல்களையும் கனவுப் பார்வையாகக் கவித்தது போதாதென்று, தன் அகத்தூடும் அப் பார்வையைப் பிரயோகிக்கத் தொடங்கியிருக்கிறான். அறிவுலகத்தில் இதைச் செய்துகொண்டு வருவதைப் போல, கலையுலகத்திலும் செய்யப் பார்க்கிறான். இவ்வாறு செய்யும்போது, சில சமயம், பழைய முறைகள் தடையாக இருப்பதாகவோ அல்லது அவைகளால் இவனுக்குத் தேவையானபடி செய்ய இயலாமல் போவதாகவோ உணர்கிறான். புது வழிகளை வகுத்துக் கொள்ளப் பார்க்கிறான். இதில் ஒரு அலை புதுக் கவிதை.

கலைக்கு அடிப்படை அழகுணர்ச்சி என்கிறார்கள். அழகு என்பது தனித்துச் சுயேச்சையாய் இருக்கும் ஒரு பொருளல்ல. மனிதன் தோன்றும்போதுதான் அழகும் பிறக்கிறது. மலையோ, அருவியோ, மலரோ அழகுடன் இருப்பதில்லை. மனிதன் அவற்றைக் காணும்போதும் நுகரும்போதுதான் அழகு உண்டாகிறது. மனிதன் வகுத்துக்கொள்ளும் தர்மங்கள் மாறி மாறி வருகிறதை நாம் காண்கிறோம். காலப் போக்கில் பார்த்தால், இத் தர்மங்களின் எல்லைகளை மனிதன் கொஞ்சம் கொஞ்சமாக விஸ்தரித்துக் கொண்டு வந்திருப்பதையும் நாம் பார்க்கிறோம். இதன் காரணமாகவோ அல்லது இதற்குக் காரணமாகவோ, மனிதனுடைய அறிவும் ரசனையும் விரிவடைந்து வருகிறது. தலைமுறை தலைமுறையாக அழகு இதில்தான் என்று சொன்னவற்றில் மாத்திரம் நான் இன்று அழகைக் காணவில்லை. தாமரையும் ஆம்பலும்தான் அழகுக்கு உறைவிடம் என்று ஒரு காலம் நான் நினைத்திருக்கலாம். ஆனால் இன்றைக்கு என்னால் புல்லின் பூவிலும் கள்ளிச் செடியிலும் அழகு காண முடிகிறது. அன்று, வெண் புரவியும் தடந்தேரும் மதகரியும் அழகானால், இன்று மூர்க்க வெறி கொண்ட, மகிஷம்போல, முக்காரமிட்டு ஓடி உசுப்பி நிற்கும் ரயில் அழகு. வாலைக் குமரிபோலத் திமிறி நிற்கும் ஜெட் விமானம் அழகு. சந்திரனில் சொருகித் துடித்து நிற்கும் ராக்கெட் அழகு. ராவணன் தர்பாரில் கர்ஜிப்பதுபோல பிரம்மாண்ட யந்திரங்கள் முழங்குவது அழகு. இவற்றை ஆக்கி இயக்கும் ஆணும் பெண்ணும் அழகு. அவர்களைப் படைக்கும் பெண்ணும் ஆணும் அவர்களின் உணர்ச்சிகளும் அழகு.

வாழ்க்கை ஒரு முரண்பாட்டுக் குவியல். அழகைப் பிறப்பிக்கிற மனிதனே அசிங்கத்தையும் பிறப்பிக்கிறான். வாழ்வின் அழகின் முழுமை இம் முரண்பாட்டின் தன்மையிலும் இருக்கிறது. 'போயிங்-707 அழகானால் பி-57 அசிங்கம். ராக்கெட் அழகானால் அதன் அணுகுண்டுக் கொண்டை அசிங்கம். யந்திரங்கள் அழகானால், அவைகளின் எண்ணெய்க் கரங்களுக்கும் இரும்புப பற்களுக்கும் மனிதன் பிடிசோறு, முழுக் கந்தைக்காக தன்னைப் பலி கொடுக்க நேருகின்ற நிலை அசிங்கம். ஆணும் பெண்ணும் அழகானால், அவர்கள் இன்று ஒருவரோடு ஒருவர் உறவாடும் நிலை அசிங்கம்.

அழகையும் பெருக்கிக் கொண்டு அசிங்கத்தையும் பரப்பிக் கொண்டு அறிவையும் வளர்த்துக் கொண்டு நாம் இருக்கிறோம். அழகே அசிங்கமாகவும், அறிவே இருளாகவும், எல்லாம் அழகாகவும் அசிங்கமாகவும் அறிவாகவும் இருளாகவும் வேறு வேறு சமயங்களில் தோன்றுகிறது. நாம் பார்க்கிறோம். உணர்கிறோம். முன்பு புரிந்ததாக இருந்ததெல்லாம் இன்று புதுமையாக, புரியாத புதிராக, புரிந்துகொள் என்று மனசை நச்சரிக்கும் சில்வண்டாகத் தெரிகிறது. நாம் தடுமாறுகிறோம். கீழே விழுகிறோம். விழுந்து சிரிக்கிறோம். சிரித்து அழுகிறோம். இதையெல்லாம் வெளிக்காட்ட கலைஞனுக்கு ஆத்திரம். எண்ணிய, திண்ணிய, மண்ணிய, புண்ணிய என்று கட்டங் கட்டும் வரம்புகட்கு உட்பட அவனுக்குப் பொறுமையில்லை என்பது மாத்திரமல்ல, உட்பட மறுக்கிறான். இதில் ஒரு அலை புதுக் கவிதை.

இன்று நம்பிக்கை புரண்ட காலம். முன்னே ஆண்டவன் இருந்தான். எல்லாம் அவனிச்சையாக, அவன் லீலையாக நடந்தது. மனிதனால் கெஞ்சி முறையிட முடியும், பக்தி செலுத்த முடியும். தம்பிரான் தோழரானால் ஏவ முடியும். பிறகு ஆண்டவனை அழித்துவிட்டோம் பகுததறிவிலும், மனித ஜாதியின் சிருஷ்டி சக்தியிலும், நேர்மை சத்தியம் என்ற அறவுணர்ச்சிகளிலும் ஏற்பட்ட தன்னம்பிக்கையை அரியணையேற்றி வைத்தோம். இன்றைக்கு நமக்கு அவ்வளவு நிச்சயமில்லை. "நடுக் கிணற்றில் நிகழ்காலம்" நடத்துகிறோம். மனிதனின் சிருஷ்டி சக்தி அவனையே வேரறச் சம்ஹாரம் செய்யும் சக்தியாக வளர்கிறதைப் பார்க்கிறோம். பகுத்தறிவின் பின்னால் குருட்டுச் சக்திகள் கயிறிழுப்பதைப் பார்க்கிறோம். நேர்மையின் பின்னால் குரூரத்தின் கோரப் பற்கள் நெரிக்கிறதைக் கேட்கிறோம். தன்னம்பிக்கை பிறர் நம்பிக்கையைத்தேய்த்துப் பாழாக்குவதைப்பார்க்கிறோம். இதே சமயம், மழை மேகத்தில் மின்னல்கள் தெறிப்பதுபோல, ஊனமடைந்த மானிட வாழ்வில் சில உன்னதமும் காண்கிறோம். பண்பும் அன்பும் செம்மையும் வீரமும் காதலும் தர்மமும் அமைதியும் மேதையும் ஆற்றலும் அழகும் அறிவும் எல்லாம் காணகிறோம். இந்தச் சூழலில் தனையும் புரிந்து கொண்டு பிறருக்கும் புரியவைக்கும் முயற்சியில் கலைஞன் இறங்கும்போது, அவனுக்குத் தெளிவோடு கலக்கமும் கிடைக்கிறது. சில சமயம் தெளிவு அதிகமாகிறது, சில சமயம் கலக்கம் அதிகமாகிறது. இதில் ஓர் அலை புதுக்கவிதை.

இப்படிப் பல பக்கங்கள் கொண்ட வைரக்கல் போன்றது புதுக் கவிதை. ஒரு பக்கம் அழகு, புது மாதிரியான அழகு,

"பரிதி புணரப் படரும் விந்து
வெளிச்சச் சிறகில் மிதக்கும் குருவி"—என்று
விடிவைப் பார்த்து வியக்கும் அழகு.

ஒரு பக்கம் ஏக்கம், மனமுறிவு:

"வெற்று வெளி நடந்தது
வெந்து புழுங்கும்
என் நனவின் அசதி"—என்கிற பெருமூச்சு

காதல், தத்துவம், கோபம், சந்தேகம்,

"நாங்களோ கவிஞர்
ஆமைபோல் உணர்ச்சியின்
கிணற்றில் அமிழ்வோம்
முதுகோடு கொண்டு விதியை எதிர்ப்போம்
கீழுலகேழும் தயங்காது இறங்கி
ஜீவன்கள் லீலையில் கூசாது கலப்போம்"

என்னும் அறைகூவல், சமகால விமர்சனங்கள், தன் மனதையே குடைந்தெடுத்து ஆராயும் நேர்மை, பாலுணர்ச்சி, பொங்கல், ரேஷன், காந்தீயம், கம்யூனிஸம், அறச்சீற்றம், ஸ்வதரிசனம், டிவால்யுவேஷன், காலை இரவு நிலா வர்ணனைகள், கனவுமயக்கநிலைகள்,

''பனையோலைக் குடிலுக்குள்
பிரித்தொதுக்கித் தள்ளப்பட்ட
பறைச்சிப் பெண் மார்பில்
பால்''

—என்கிற ஞானம்,

''அறிவை ஒதுக்கிவிட்டு
அருக்கனையே சரணடைவோம்''

—என்ற உபதேசம்

''சக்தி யென்னிரு தோள் தலை மூளை
சக்தி யெம் போல் மாந்தர் தம் கூட்டம்
சக்தி யென் கைவிரல் ஆட்டம்
சக்தி யென் கை சாட்டையின் சொடுக்கு''

—என்கிற இறுமாப்பு,

''விண்ணிடித்து
வளர்ந்த ரூபம்
கண்ணையிழந்து
குருடாக—
காலடியில்
எலும்புக்கூடு''

—என்கிற மனமறுகல், இப்படிப் பல பல பக்கங்கள் உண்டு. சுருங்கச் சொன்னால் இன்று நம்மிடையே இருக்கும் உணர்ச்சிகள் அனைத்தின் பிரதிபலிப்பையும நாம் புதுக்கவிதையில்காண்கிறோம்.

புதுக்கவிதை உருவப் பிரதான்யத்தை முறித்து விட்டு உள்ளடக்கத்துக்குத் தக்கபடி தன்னை அமைத்துக் கொள்கிற உருவம் படைத்திருக்கிறது. உண்மையில் கருத்துப் பிரதான்யமே புதுக்கவிதையில் தென்படுகிறது. இப்படி இருக்கும் கருத்தும் பெரும்பாலும் மனசோடு நேரடியாக உறவாடுகிற மாதிரி அமைக்கப்படுகிறது. புதுக்கவிதைகளில் கவிஞனுடைய மனமே வாசகன் காது கேட்கப் பேசுகிறது. இவ்வாறு பேசுவதற்குக் கவிதை உருவம் தடையாயிருக்கக் கூடாதென்று மரபுவழி உருவத்தை உதறியெறிந்து விடுகிறது. இவ்வெளியீட்டிலே வெற்றுப்பகட்டின்மை, நேர்மை, துணிவு, சொற்சுருக்கம், நூதன அழகுகள், பேச்சு நடைப் பிரயோகங்கள் எல்லாம் இருப்பதால் வாசகனுடைய மனசை நேரடியாகத் தொட்டுவிட முடிகிறது.

இவ்வளவும் சொல்லிவிட்டு இன்னுமொன்றுநான் சொல்லவேண்டும், படைப்பாளியென்ற முறையில். வரை முறையற்ற தன்மை, நூதனப்படிமங்கள், மயக்க நிலையையும் வெளிப்படுத்தும்முறை, கொச்சைமொழிப் பிரயோகங்கள் முதலியவை எப்படி புதுக் கவிதைக்கு வலுவேற்றுகின்றனவோ, அதே போல அவை புதுக் கவிதையை பலஹீனப் படுத்தும் சாதனங்களாகவும் அமைவதற்கு சந்தர்ப்பங்கள் உண்டு என்பதை உணர்ந்து கவிஞன் விழிப்போடிருக்க வேண்டும். நான் எப்படி விமர்சகர்களைப் பார்த்து, ''இது பழசா புதுசா என்று முதலில் பார்க்காதீர்கள். கவிதையா அன்ரு என்று பாருங்கள்'' என்று கேட்கிறேனே, அதேபோல படைப்பாளிகளுக்கு (என்னையும் சேர்த்துத்தான்), ''நான் புதுக்கவிதை படைக்கவேணும் என்று நினைக்காமல், கவிதை செய்யவேணும் எனறு நினையுங்கள்'' என்று கூற விரும்புகிறேன். நமக்குத் தொழில் கவிதையே ஒழிய புதுக்கவிதையல்ல.

கவிதைத் தன்மை குறைந்த படைப்புகளை ஆக்க எந்தக் கவிஞனும் விரும்புவதில்லை. செய்யுளெல்லாம் கவிதையென்று பலர் நம்பிவிடுகிற இக்காலத்தில் சட்டதிட்டங்கட்குட்படாது செய்யப்படுகிற புதுக் கவிதையில் கவிதைத் தன்மை இருக்கிறதா என்று கண்டுகொள்ளசிலருக்கு கஷ்டமாயிருக்கலாம். ஆனால் இந்தச் சந்தேகம் அதை ஆக்குபவனுக்கு இருக்கக் கூடாது. நான் எழுதுவது எல்லாம் உயர்ந்த கவிதையென்று நானே நம்பிவிட்டால் — செய்யுளெல்லாம் கவிதையென்று நம்புகிறற்போலத்தான். எனக்கு என்னையே கண்டு கொள்கிற நேர்மையும் தீரமும் வேண்டும் கொச்சையாகவோ, 'புரியாத' மாதிரியிலோ எழுதுவதுதான் புதுக்கவிதையின் இலக்கணம் என்று சில சமயம் நினைப்பு விந்துவிடுகிறது. எப்படி யாப்பிலக்கணப்படி எழுதியதெல்லாம் கவிதையாகாதோ, அப்படியே அவ்விலக்கணம் தப்பிப்பிறப்பதெல்லாம் புதுக்கவிதையாகிவிடாது. அதுபோலவே, எழுதியவனுக்கேபுரிந்திராத 'அதிகஷ்டமான' கவிதை மிகவுயர்ந்த புதுக்கவிதை ஆகிவிடாது சொல் புதிது பொருள் புதிது, கற்பனை வளம்புதிது, பேசாப் பொருளைப் பேசநான் துணிகிறேன் என்பதோடு, விளங்காப் பொருளை விளக்க நான் முயல்கிறேன் என்பதையும் நான் நினைவிறுத்திக்கொள்ளவேண்டும். நான் விழிப்புடன் இல்லாவிட்டால், என்னையே ஏமாற்றிக் கொள்ள புதுக் கவிதையில் வாய்ப்புண்டு. படிமங்களையும் ஃபிராயிடின் குறியீடுகளையும் கொட்டி நிரப்பி, சொற்களை வெட்டி ஒட்டி புதுக் கவிதையின் உருவமில்லாத உருவத்தில் 'புரியாத்தன'த்தையும் சேர்த்து நான் எழுதிவிட்டு அதைப் புதுக் கவிதையென்று உலாவவிட்டுவிட முடியும். நான் கெட்டிக்காரனானால், எட்டு நாளைக்காவது ஊரை என் புலமையில் நம்பிக்கை வைக்கச் செய்து விட முடியும், புதுசான நினைவிலே. இப்படி நேர்வதும் நேராதிருப்பதும் கவிஞனின் நேர்மையைப்பொறுத்தது. ''நான் கவிதை இயற்ற வேணும்'' என்கிற நினைப்பு முதல் நின்றால், ''நான் புதுக்கவிதை இயற்ற வேணும்'' என்று நினைக்காதிருந்தால் ஓரளவு என்னிடமிருந்தே என்னைக் காத்துக் கொள்ளமுடியும். அதுபோலவே, ''நான் எழுதியிருப்பது கவிதைதானா, அது எனக்கு விளங்குகிறதா'' என்று நானே உரைத்துப் பார்த்துக் கொண்டால் தான், நான் தோண்டியெடுத்திருப்பது தங்கமா கல்லா என்று எனக்குத்தெரியும். தங்கத்தின் மாற்று பார்ப்பது மற்றவர்கள் வேலை.

கடைசியாக ஒரு வார்த்தை. இது கவிஞனின் கண்ணோட்டத்தைப் பற்றியது. கவிஞனின் மனசே பிறந்த மேனியாக வெளிப்படுத்தப்படும் புதுக்கவிதை அவனுடைய கண்ணோட்டத்தினால் வெகுவாகப் பாதிக்கப்படுகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனிப் பார்வை—அவனுடைய அறிவையும் அநுபவத்தையும் அவன் அவற்றை ஆராய்ந்திருக்கும் வகையையும் அடைந்திருக்கும் முடிவுகளையும் முடிவற்ற தன்மைகளையும் பொறுத்து — அமைந்திருக்கிறது. அதே சமயம், மனிதர்கள் வகுப்புகளாகவும் வர்க்கங்களாகவும் சமூகங்களாகவும் தேசங்களாகவும் கூடியும் பிரிந்தும் வாழ்வதனாலே, இப்பிரிவுகளுக்கும் கூட்டங்களுக்கும் தனியே ஓரளவு பொதுவான கண்ணோட்டங்களும் உண்டு. இவையெல்லாம் எக்காலத்திலும் மாறாமல் ஸ்திரமாக இருப்பதில்லை. மாறிக்கொண்டே போகின்றன. ஒட்டு மொத்தத்தில், காலக்கணக்கில் பார்த்தால், மனிதன் தன்னை, நான் முதலில் குறிப்பிட்ட மாதிரி, விசாலப்படுத்தி வந்திருக்கிறான். அறிவியலால் இன்று உணரப்படும் இந்த ஆதர்சம் கவியுணர்வாலும் உணரப்பட்டுப்பட்டு புதுப்பிக்கப்பட்டு வந்திருக்கிறது. மனிதனின் பார்வையை விஸ்தரித்துக் கொடுக்கும் இந்த தன்மையை அவனுடைய பரிணும

(தொடர்ச்சி — 13 பக்கம்)

# டிரிப்

இரண்டாம் தடவையாக அவள் மௌனமாகி விட்டாள். எங்கோ ஒரேயடியாய் மேலே போவது போன்ற உணர்வு கைகள் நீண்டு கொண்டே போவதுபோல் தோன்றியது கால்களைப் பற்றிக்கூட அப்படித்தான் தோன்றியது

இரவின் அமைதி இன்னும் கனத்து விட்டது. மற்றவர்களுக்கு இன்னும் நேரமாகும் எனத் தெரிந்தும் கூட அவள் வட்ட திண்டை எடுத்து அவற்றோடு சேர்ந்து சாய்ந்து கொண்டாள். அவளுடைய முறை வரும்போது அவளும் கரத்தை நீட்டி பைப்பை பெற்றுக்கொள்வாள். இரண்டொரு தம் பிடித்து விட்டு பக்கத்திலிருக்கும் கணவனிடம் கொடுத்து விடுவாள்.

அறையில் இரண்டே இரண்டு மெழுகு வர்த்திகள் தான் எரிகின்றன. ஒன்று அறையின் இடது மூலையில். திபேத்திய பீடத்தின் கீழே. மற்றொன்று தரையில் அதைச் சுற்றி நாலைந்து பேரும் அமர்ந்திருக்கின்றனர். இம்மாதிரியான சமயங்களில் அந்த பீடத்தின் மீது மனத்தைச் செலுத்தி சித்தத்தை ஒருமுகப்படுத்துவது அவளது கணவனுக்கு மிகவும் பிடிக்கும். உண்மையிலேயே சற்று நோக்கிற் செல்லாம் அப்பீடத்தில் விசித்திரமான உருவங்கள் ஆடி அசையத் துவங்கி விடும். நார்மலாக இருக்கும் போது கண்களுக்குப் புலனாகாத பல பல வண்ணங்கள் அதிலிருந்து மெல்ல மெல்ல எழும்பும்.

ஆனால் இப்பொழுதெல்லாம், அதிலும் பலதடவையாக அவள் தன்னை ...முற்றிலும் காலியாக... சூனியமாகத்தான் வைத்துக் கொண்டிருக்கிறாள். கடந்த காலத்திற்கும் நிகழ்காலத்திற்குமிடையே சுதந்திரமான உணர்வுடன் உலவுவது அவளுக்குப் பிடித்திருந்தது. சில சமயம் அவள் குழந்தையாகி விடுவாள். சில சமயம் தன்னை விட மிகப் பெரியவளாக வயது முதிர்ந்தவளாகி விடுவதுமுண்டு. அவளுக்கு நன்றாக நீந்தவேவராது. ஆனால் மீனின் 'இமேஜ்' அவளுக்குப் பிடிக்கும். பெரும்பாலும் இக்கணங்களில் அவள் துள்ளித்திரியும் மீனாகி விடுவாள். கடல்களிலே தங்குதடையின்றி செம்படவனின் பயமின்றி, அச்சமின்றி துள்ளி விளையாடும் மீனாகி விடுகிறாள் அவள்.

இப்பொழுது அவளுக்கு பைப். தேவையில்லை. அவள் 'மர்மேட்' நிலையிலிருக்கிறாள். வேண்டாமெனக் கையை அசைத்துவிட்டு அவள் தரையில் சரிந்துவிட்டாள். இமைகள் கவிழ்ந்து கொண்டன. ஒன்றன்பின் ஒன்றாக, எத்தனை எத்தனையோ பிம்பங்கள், இமேஜஸ். மூடிய விழித் திரையிலே ஓடின. ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து வரும் அலைகள் மாதிரி, அறையில் மெல்ல ஊதிவிடும் ஓசையைத் தவிர...மௌனம். காடாந்திர மௌனம்தான்.

பைப் குடிப்பதற்கும் ஒரு 'நாக்' இருக்கிறது. மிகவும் சிரமப்பட்டு அவள் அதைக் கற்றுக் கொண்டிருக்கிறாள். அவள் சிகரெட் கூட குடித்ததில்லை. அதனால் முதலில் நிறைய புகையை உள்ளுக்குள்ளே விழுங்கி விடுவாள். effect...எபெக்டே இருக்காது. ஆனால் இப்பொழுதெல்லாம் மிக்க லாகவமாகப் புகையை இழுத்து, நுரையீரல்கள் வரை நிரப்பி விடுகிறாள்.

யாருடைய கரமோ அவளைத் தீண்டியது. தரையில் மல்லாந்துபடுத்துக் கொண்டாள். மேற்கூரையை வெறித்துப் பார்க்கத் துவங்கினாள். அக்கரத்தின் தீண்டலிலிருந்து அவள் ஏன் நழுவிக் கொண்டாள். ஒருக்கால் தான் இவ்வளவு சிக்கிரம் அதற்கு தயாராக இல்லையோ!

சோனி சமையலறையில் ஏதோ செய்து கொண்டிருக்கிறாள். லேசான கடபுடா ஓசை. வாசற்படிக்கு அப்பாலிருந்து அவள் குரல் கேட்கிறது—"நீங்களெல்லாம்—இன்னும் 'ஹை' ஆகவில்லையா?"

"சோனி! இம்மாதிரி திடீரென கேள்விகள் கேட்கப்படுவதில்லை—" சோனியின் கணவனின் பதில் இது.

சோனி எதுவும் உட்கொள்ளவில்லை. அன்றிரவு முதன் முறையாக, அவர்களுக்காக 'பேபி சிட்டிங்' கைமேற் கொண்டிருக்கிறாள். எப்பொழுதுமே அவள் 'டிரிப்' என்ஜாய் செய்பவள். ஒருக்கால் இம்முறைதான் இதில் இல்லையே என்ற வருத்தம் இருக்கலாமோ என்னவோ! ஆனால் இம்மாதிரியானவர்களில் யாராவது ஒருவர் எமர்ஜென்ஸியைக் கருத்தில் கொண்டு, சுயநினைவில், சுருசுருப்பாக இருப்பதும் அவசியம். போலீஸ் எப்பொழுது வரும் என்பது யாருக்குத் தெரியும்! சோனியின் கணவன் யாராரிடமிருந்து இதை வாங்குகிறானோ! போலீஸ் அவன் பின்னால் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. தன் சின்னஞ்சிறிய ஊரின் ஒற்றைப் பத்திரிகையின் முதல் பக்கத்தை அவள் கற்பனை செய்தாள். பரபரப்பான செய்தி "புரொபசர் தன் நண்பர்களுடன் மாரிஜுவானா அருந்தும் போது பிடிபட்டார்"

நியாயமாகப் பார்த்தால் அவள் இன்று 'பேபிசிட்டிங்'கில் இருக்கவேண்டும் எதிர் பாராமல் ஸ்டீபன் வந்தான். இதுதான் அவனுக்கு முதல் தடவை...ஸ்டீபனின் 'ஹை'...யில் ஆவலுடன் அவளும் பங்கு பெற விரும்பினாள்.

தரையிலிருந்த விரிப்பின் மீது வலது உள்ளங்கையைத் தேய்த்துக் கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள். எவ்வளவு மென்மையான, இதமான கம்பளிவிரிப்பு.

ஒவ்வொருமுறையும் ஏதாவதொரு புதிய தொரு அனுபவத்தின் உணர்வு.

சோனி தண்ணீர் தம்ளரை அருகில்கொணர்ந்து வைக்கிறாள் குளிர்ந்த நீர் அமிருதமாக இருக்கிறது. அவள் கணவன் மூன்றாவது 'பைப்பை' தயாரித்துக் கொண்டிருக்கிறார். விழிகளை மலர்த்தியதும்...மெதுவாக இயங்கும் திரைப்படம் எதையோ பார்ப்பது போலருக்கிறது. நீரின் மேலேயுள்ள பாசி படலம் போலீயாவுமே மெல்ல மெல்ல அசைகின்றன. சோனியின் கணவன், அவளுடைய கேசத்துடன் விளையாடுகிறான். ஸ்டீபன் எழுந்து நடக்கிறான். அவள் கணவன் மிகமும்முரமாக பைப்பை நிரப்பிக் கொண்டிருக்கிறார்.

மெழுகுவர்த்தியின் ஒளி ஆடாமல் அசையாமல் ஒளிர்கின்றது.

ஸ்டீபன் ரெஸ்ட்லெஸ். ரொம்பபேருக்கு முதல் தடவை இப்படித்தான். தாங்க முடியாது. ஆனால் ஸ்டீபன் பலகீனமானவன் அல்ல சமாளித்துக் கொள்ள முடியாதபடி, அவ்வளவுகண்டிரோல் இல்லாதவனாகத் தெரியவில்லை. ஆனால் ஒருவரின் உள்ளத்திலிருக்கும் ரகசியங்கள் பிரச்னைகள் யாருக்குத் தெரியும்? இம்மாதிரியான காரணங்களில்தான் ஒரு

வனுக்கு தன்னைத்தானே கூறுபோட்டு நேருக்கு நேர் பார்த்துக்கொள்ளும் வலிமை இருக்கிறதா? இல்லையா என்பது தெரியும்.

பைப் அவளிடம் வந்ததும் அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். தனக்குத் தேவையே இல்லை என்பது தெரிந்திருந்தும் பைப்பை வாங்கிக் கொண்டாள். வெகு நேரமாக உயரமான ஒரு இடத்தில் நின்றிருந்தாள். ஒரு தம் இழுத்ததுமே யாரோ புட்பால் மாதிரி அவளை உயரத் தூக்கி வீசி எறிந்து விட்டார்கள். அந்தரத்தில் குட்டிக்கரணம் போட்டுக் கொண்டிருக்கிறாள் அவள். ஆமாம் உட்கார்ந்த நிலையிலேயே குட்டிக்கரணம் தலைகீழாக. அவள் முழங்கால்களை மடித்து, அவற்றினிடையே முகத்தை பதித்துக் கொண்டாள். ஒவ்வொரு தடவையும் ஏற்படுவதுபோல் இம்முறையும் அவளுக்கு ஒரே வியப்பு வீட்டிற்குள், அறையில் அசையாமல் உட்கார்ந்திருக்கும்போதே, அவள் வெளியே திறந்த ஆகாயத்தில் எப்படி பறக்க முடியும்?

நீண்ட தூரம் பறந்தபின் அவள் திரும்பி வந்து விட்டாள்.

நீ. 'ஹை' யா?

ஆம் — ரொம்ப நீ?

'தெரியவில்லை. முதல் தடவையல்லவா? விசித்திரமாக இருக்கிறது, ஆனால் மோசமில்லை.'

கணவன் அவளைப் பார்க்கிறான். ஸ்டீபன் வேறு ஏதாவது சொல்லி இருப்பான் ஆனால் வாயை மூடிக் கொண்டு விட்டான். இப்பொழுதும்கூட அவன் குனிந்தவாறுதான் அமர்ந்திருக்கிறான் பெண்களைப் போன்ற நீண்ட தலைமுடி முன்னே சரிந்து பிரிபிரியாக அவனது நெற்றியை மறைத்துக் கொண்டிருக்கிறது.

ஸ்டீபன் —அவள் முணுமுணுத்தாள். "நீ எங்கே இருக்கிறாய்?"

எங்கோ... பின்னால் நெடுந்தொலைவில் அல்லது முன்னால் வெகுவெகு தூரத்தில் எதிர்காலத்தில் ஓர் பெரிய மஷ்ரூமின் நிழலில் —

சோனியின் கணவன் இடைமறித்தான்—யுத்தத்திலிருந்து திரும்பியதிலிருந்து ஸ்டீபன் மஷ்ரூமின் நிழலில்தானிருக்கிறான்.

சோனியின் கணவனுக்கும், தனக்குமிடையே ஒருமுறை—உணர்வு தலை எடுப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது. ஆனால் அது வளரவில்லை. இதற்குக் காரணம்? சோனியின் தனக்குள்ள மரியாதை. அல்லது சோனியின் கணவனுக்கு தன் கணவனின் பாலுள்ள பரிவு உணர்ச்சியாகத்தானிருக்க வேண்டும் எதுவானாலென்ன? இருவருமே ஊக்கம் காட்டவில்லை. ஆனால் இப்பொழுதும்கூட சில சமயம் சோனியின் குரலில் பொருமை இழையோடும்.

அவள் நீருக்குள்ளே, மிக மிக ஆழத்தில் அமிழ்ந்திருக்கிறாள். யோசித்துக் கொண்டிருக்கிறாள்.

அவள் கணவர் அவர்கள்பால் முதுகைக் காட்டிக் கொண்டு. பத்மாசன நிலையில் அமர்ந்து விட்டார். தியானத்தில் ஆழ்ந்துவிட்டார்.

ஸ்டீபன்! அங்கே பார்! அந்தப் படத்தில் ஏதோ புதியதாக... நூதனமாகத் தெரிகிறதே! இங்குமங்கும் உள்ள வண்ணங்கள் கறுப்பு திரையில் பொன்னிறத் திட்டுக்கள்.

எல்லோரும் அந்தப் படத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்டீபனின் முகத்தில் ரொம்ப 'பொலைட்' பாவம். அவனுக்கு அசதியாக இருக்கிறது. உடலெங்கும் ஒரு விதத்தளர்ச்சி. சோம்பலில்லை. இறுக்கிப் பிணைத்திருந்த தசைநார்களின் முடிச்சைத் தளர்த்தினாற் போன்றதொரு தளர்ச்சி. இதற்கென்று ஒரு பெயரில்லை. அசதி, களைப்பு, தளர்ச்சி. ஊஹூம்... இதெல்லாம் இல்லை. தன்னுள்ளே இருந்த முறுக்கை, விறைப்பை எல்லாம் கூட்டிப் பெருக்கி ஒரு மூலையில் குவித்து விட்டாற்போன்ற உணர்வு.

இப்பொழுது அவள் இரண்டாகி விட்டாள் (மோதுன்) பார்க்கப் படுபவள், பார்வையாளர், இரண்டும் அவள்தான் இது மட்டுமல்ல, சுறுக்கெழுத்தாளர்போல். பரபரவென்று, தன்னைச் சுற்றிலும் இயங்கும் நடவடிக்கை, பாவம், உணர்வு, மனநிலை ஒவ்வொன்றையும் நோட் புக்கில் எழுதிக் கொண்டே போகிறாள் அவள் நினைப்பதும், நினைவு படுத்திக்கொள்வதும். திரைப்படம்போல, கண் எதிரே ஓடுகின்றது கடலலைகளின் பேரிரைச்சல் காதுகளிலே ஒலிக்கின்றது. சங்கை காதருகில் வைத்து ஊதினால் எப்படி இருக்கும். அப்படியேதான்.

இமேஜெஸ் எழும்பி வருகின்றன. கன்யாகுமரியின் கடல், பூரிக் கடற்கரை, ரோட் ஐலெண்டில் அட்லாண்டிக்கின் முழக்கம். திரைப்படம் இப்புதிய காட்சியில் நெடுநேரம்வரை நின்று விடுகிறது—அவர்களிருவரும் கடற்கரையில் உலவிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் புடவைக் கரையோரம் நனைந்து ஈரமாகி மணலில் புரள்கிறது. செருப்புகள் கையில் இருக்கின்றன மெலிந்த ஒற்றைநாடிப் பெண்ணொருத்தி அவளுடனிருக்கிறாள். அப்பெண்ணை முதல் முறையாக கடற்கரையில்தான் கண்டாள். அப்பெண் மிக்க பரவசமடைந்த நிலையில் டிரினி லோபேஜ்ஜின் ஒரு பாடலைத் தனக்குள்ளே மெல்ல இசைக்கின்றாள் — 'எலுமிச்சை மரம் அழகானது, எலுமிச்சை மலர்கள் இனியவை. ஆனால் எலுமிச்சை பழங்கள் புளிப்பு... என் மகளே! என் தந்தை சொன்னார் காதல்கூட எலுமிச்சம் பழங்கள் போல...'

அவள் விழுந்து விழுந்து சிரித்தாள். நெடுநேரம் சிரித்துக்கொண்டே இருந்தாள். அலை வீசும் கடல், பெண்ணின் வாடிய முகம். பாடல் யாவும் ரொம்ப funny ஆக இருந்தன. மெல்ல அவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். தான் ஏன் சிரித்தோம் என்றே அவளுக்குத் தெளிவாகவில்லை. 15, 16 வயதுடைய அப்பெண்ணிடம் அவள் எதைச் சொல்ல முடியும்? எப்படி? இருவருக்குமிடையே நிலவிய அந்த சரளமான தோழமை உணர்வு மயமாக மறைந்துவிட்டது. அன்று மாலை முழுவதும் அந்தப் பெண் முகத்தை தூக்கி வைத்துக் கொண்டே இருந்தாள். இரவு சினிமா அழைத்துச் செல்லுகிறேன் என்று லஞ்சம் கொடுக்க வேண்டி வந்தது. பிலிமில் சசிகபூர் இருந்தான். பிலிம் முடிந்து வெளியே வந்தபொழுது அந்தப் பெண் மீண்டும் மகிழ்ச்சியோடு

இருந்தாள். இந்த வயதில் 'எக்ஸ்டேசி'யை அடைவதற்கு அவளுக்கு வெளிச் சாதனங்களின் தேவை எதுவும் இல்லாமலிருந்தது.

சுகம் என்பதற்கு அவரவருக்கு தக்க பரிபாஷைகள் எத்தனையோ! ஒருவன் குடியில் தன்னை ஆழ்த்திக் கொண்டு தன்னை மறக்க விரும்புகிறான். சிலருக்கு சசிகபூரின் பிலிம் தேவையாக இருக்கிறது. அவளைப் பொறுத்த வரையில் இந்த பரிபாஷைகள் மாறிக் கொண்டே இருக்கின்றன. வெகு நாட்களுக்கு முன்னர் இது குழந்தைகளாக இருந்தது. நல்ல ஆரோக்கியமான புத்திசாலியான குழந்தைகள். இப்பொழுது அவை பெரியவைகளாகிவிட்டன. அவர்களின் அப்பா அவர்களை போர்டிங் ஹவுஸ்க்கு அனுப்பிவிட்டார். வருடத்திற்கொருமுறை வீட்டிற்கு வருகின்றனர். ஒவ்வொரு முறையும் அவர்கள் தன்னிடமிருந்து பின்னும்விலகிச்சென்றுவிட்டதாக இடைவெளியின் தூரம் அதிகரித்துவிட்டதாகப் படுகிறது. இரண்டு பிள்ளைகளிடம் என்ன பேசுவதெனபதே புரிவதில்லை. குழந்தைகளும் அம்மாவின் ரொடீனில் இடைஞ்சல் ஏற்படுத்துவதில்லை. முன்பெல்லாம் அவள் குழந்தைகளுடன் ரொம்ப பிஸியாக இருப்பாள். விதவிதமாக பட்சணம், பலகாரம் தயாரிப்பாள். ஆனால் குழந்தைகளின் ருசி இப்பொழுதெல்லாம் மாறிக் கொண்டிருக்கிறது. அம்மா தயாரித்த பலகாரத்தை, உணவை மரியாதைக்காகச் சுவைத்துவிட்டு வைத்து விடுகின்றனர். கணவர்! அவளைப் பொறுத்தவரையில் அவர் ரொம்ப காம்பிளிகேடட் சுய தேவை பூர்த்தியில் நம்பிக்கை கொண்டவர் பிறர் கையை எதிர்பாராதவர். துணிமணிகளைத்தானே எடுத்து வைத்துக் கொள்வார். பனியன், காலுறை என நிறைய வைத்திருக்கிறார். தேட வேண்டியதில்லை எதையும் தானே துணிகளை லாண்டிரிக்குப் போடுகிறார் வாங்கியும் வருகிறார் தன்னறையைத் தானே சுத்தமாக வைத்துக் கொள்கிறார். குழந்தைகள் சிறியவர்களாக இருந்த போது காலையில் தானே தேநீர், காலை சிற்றுண்டி தயாரித்து சாப்பிட்டுவிட்டு, காலை வகுப்பிற்குப் போய் விடுவார். இப்படிப்பட்ட கணவனைப் பற்றி என்ன குறை கூற முடியும்? ஆனால் அவளுக்கு குறை இருந்தது. அது மௌனமாக இருந்தது. அந்தரங்கமான குறை அது. ரொமான்ஸ் இல்லை என்ற குறை.

'வுமன் அண்டு ஹோம்' கதைகளைப் படித்து உன் மூளை குழம்பிவிட்டது' என்று அவள் கணவர் அடிக்கடி கூறுவதுண்டு.

குழந்தைகள் போர்டிங் சென்ற பின்னர் அவள் தான் எத்தனை தனிமையை உணருகிறாள்! ஒருக்கால் கணவர் சொல்வது சரிதானோ என்னவோ! வாழ்க்கை அந்த ரொமாண்டிக் கதைகளைப்போல் இருப்பதில்லை. இருக்கவும் முடியாது. ஒவ்வொரு ஆரம்பமும் கதையைப் போல்தான் விருவிருப்புடன் துவங்குகிறது. உயிர்த் துடிப்புள்ள வேகம்! ஆனால் முடிவு பெரும்பாலும் அன் ரொமாண்டிக்தான்.

''யுத்தங்கள், இன்ஸல்ட், போதை பானங்கள்— என எப்படி ஆகிவிட்டீர்கள் பாருங்கள் உங்கள் ரூபத்தை கொஞ்சம்!''

''என்னை என்ன நீ சொல்வது! ஸ்லட் காமன் ஆகி நீ எப்படி தொள தொளத்து விட்டாய்.''

ரொமான்ஸ் முடிந்தபின்னர் ஒருவரை யொருவர் எப்படியெல்லாம் திட்டிக் கொள்ளுகின்றனர். ஆச்சர்யம்தான். ஆனால் அவளுக்குத் திட்டத் தெரியாது இப்படி ஒவ்வொரு முடிவிற்குப் பின்னரும், வாரக் கணக்காக வீட்டில் அடைந்து கிடப்பாள். மௌனமாக. பின்னர் எதிர்பாராமல் திடீரென எங்கேயோ, யாரோ ஒரு புதிய அறிமுகம் கிட்டும். மீண்டும் ஒரு முறை பழைய இன்ஸல்டை மறந்துவிடுவாள்.

இப்படித்தான் ஸ்டீபனைச் சந்தித்தாள். போர் முனையிலிருந்து கொஞ்சநாட்கள்முன்னர்தான் திரும்பி இருந்தான். இளைஞன் ஒல்லியான உடல். துருதுருப்பு. ஒரு நர்சரியில் சந்தித்தனர். இருவருமே மலர்கள் வாங்க வந்திருந்தனர்.

ஸ்டீபனுக்கு அவள் கணவரை மிகவும் பிடித்திருந்தது. பெரும்பான்மையினருக்கு அவரைப் பிடித்துப் போகும். ரொம்ப காம்பீர்யமானவர். பெருந்தன்மையான போக்கு. ஷார்ப் இன்டெலெக்ட். ஆனால் அவர் கூட அவளைப் போன்ற ரெஸ்ட்லெஸ் மனைவியைப் புரிந்து கொள்ளவில்லை இப்பொழுதும் இவ்வளவெல்லாம் நடந்த பின்னரும் அவளை மனைவியாக வைத்துக் கொண்டிருக்கிறார் இரண்டே இரண்டு விஷயங்கள். ஒன்று அவள் தன் 'அபேர்' (affair) பிறர் அறியாது கண்டெக்ட் செய்து கொள்ளுவாள். இந்த வயதில் அவரை இன்னுமொரு புதிய குழந்தைக்கு பொறுப்பாளியாக்காது கவனமாக இருப்பாள். அவ்வளவுதான். இதற்கு மேல் அவர் வேறு எதையும் கோரவில்லை.

விஷயமெல்லாம் அம்பலமான பொழுது கூட அவர் கத்தவில்லை. கூப்பாடு போடவில்லை. அடித்து உதைக்கவில்லை குழந்தைகளை பிடுங்கிக் கொள்வேன் என மிரட்டவில்லை. சில நாட்கள்வரை பேசவேயில்லை. மௌனம்தான். அவளும் வாயைத்திறக்கவில்லை மனதிற்குள் மிகவும் பயந்து கொண்டிருந்தாள். சில நாட்களுக்குப் பின் நறுக்குத் தெறித்தாற்போல சில வாக்கியங்களை அவர் கூறினார் இப்பொழுதும் உலக ரீதிக்கு அவள் அவர்மனைவி அவருடைய குழந்தைகளுக்குத்தாய். அவளிடம் அவருக்கு ஆழ்ந்த அன்புஉண்டு. இரண்டே இரண்டு விஷயங்கள் இவற்றில் அவள் கவனமாக எச்சரிக்கையுடனிருக்க வேண்டும்

இதன் பின்? அதை நினைக்கும் பொழுது அவளுக்கே வியப்பாக இருக்கிறது. அவர்களுடைய உறவு எத்தனை சரளமாய், சகஜமாய் ஆகி விட்டது அப்பொழுதுதான் போதைப்பொருள்களை அவர் உபயோகிக்கத் துவங்கினார். அவருடன் கூட அவளும் இதையெல்லாம் கற்றுக்கொண்டாள்.

அவள் கணவர் ஆர்டிஸ்ட்களைப் போல சென்சிடிவ், சூழலுக்கு அதிக முக்கியத்வம் அளிக்கிறார். எந்த போதையை ஏற்றுக் கொள்ளும் முன்னரும் ஸ்டேஜை தயாரித்து விடுகிறார். விசேஷமான உணவுப் பண்டங்கள். பிரத்யேகமான ஒளி அமைப்பு. பிரத்யேகமான இசைத் தட்டுகள். இவையாவற்றையும் விட தோழர்கள் ஃபெலோ டிராவலர்; யாருடைய எந்த ரூபம் வெளிப்படும் என யாருக்குத் தெரியும்? இன்று ஸ்டீபன் புதியவன். இதனால் சோனி—சோபராக இருக்க வேண்டியது அவசியம்தான்.

அவள் எழுந்து ரிகார்ட்ப்ளேயரில் 'பதேர் பாஞ்சாலி'யின் இசைத் தட்டைப் போடுகிறாள். ரிகார்ட் தேய்ந்து பழசாகி விட்டது. இருந்தாலும் 'ஹை'யில் இருக்கும் போது அவள் ரவிசங்கரின் இந்த இசைத் தட்டை அவசியம் கேட்கிறாள்.

"நான் தூங்கி விட்டேன் போலிருக்கிறது அவர்களெல்லாம் எங்கே?"

இசை ஸ்டீபனை எழுப்பிவிட்டது போலும். அறையில் ஒருவரும் இல்லை அவர்களிருவரைத் தவிர.

ஸ்டீபன் என்ன வேண்டும்?

அவர்களெல்லாம் எங்கே!

"நதிவரை உலாவச் சென்றிருக்கின்றனர். குளிர்ந்த காற்றும்" பனியும் மிக ரம்மியமாக இருக்கின்றன.

நீ போகவில்லையா?

இல்லை—சற்றே மிடுக்குடன் அவள் இசையை ரசிக்கலானாள்.

நதி இங்கிருந்து தூரமா?

இல்லை... 10, 15 நிமிட தூரம்தான்.

நாமும் போகலாமா? ஸ்டீபன் எழுந்துநிற்கிறான். தூங்கி எழுந்ததும் முற்றிலும் நார்மலாகி விட்டான் போலும் ஆனால் அவள் "ஹை"யிலிருக்கிறாள். அவள் காதுகளில் இன்னும் இசையின் ஸ்வர அலைகள் ஒலித்துக்கொண்டேயிருக்கின்றன.

ஸ்டீபன் அவள் பின்னாலேயே செல்லுகிறான்' அவள் கரத்தை இறுகப்பற்றி இருக்கிறான். அவள் நதியைநோக்கிச்செல்லாது பங்களாவின் பின்புறத்தை நோக்கித் திரும்பிவிடுகிறாள். பின்புறம்புல்வெளி மலர். பாத்தி நெடிதுயர்ந்த மரங்கள். ஒரு தாழ்வாரம் கூட இருக்கிறது. வட்டமான ஒரு மேஜையும் ஒரு சில நாற்காலிகளும் மடிக்கக் கூடிய சோபாவும உள்ளன.

"மழை நின்ற பின் நதிக்குப் போகலாம்"

தாழ்வாரத்தின் முனையிலிருந்து இன்னும் நீர்த் துளிகள் சொட்டிய வண்ணமிருக்கின்றன.

ஸ்டீபன் சோபாவில் அமருகின்றான். சில வினாடிகளுக்குப்பின் சாய்ந்து கொள்கிறான். பின்னர் திண்டைத தலைக்குவைத்துக்கொண்டு காலை நீட்டிப்படுத்து விடுகிறான். அவள் அருகிலிருந்த நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள். தலைகுனிந்தவண்ணம் கரங்கள் துவண்டு மடியின் மீது கிடக்கின்றன.

எப்படி இருக்கிறாய்?

ஹை! நீ!

அவர்களுடைய பேச்சுக்கள் இருளென்னும் தடாகத்தில் சிறுசிறு கற்களென விழுகின்றன.

இரவு கனத்துக் கொண்டிருக்கிறது.

அவள் எழுந்து சோபாவில் வந்து உட்காருகின்றாள்.

இதைவிட ஒருடிரிங் சாப்பிட்டிருந்தால்...ஸ்டீபன் அவளது உள்ளங்கையை இப்படியும் அப்படியும் புரட்டிப் பார்க்கிறான். இருவருமே எதிர்பார்த்துக்கொண்டு தானிருக்கின்றனர். இருவருமே ஒருவருக்கு முன் ஒருவர் தங்களது உத்வேகத்தை வெளியிட விரும்பவில்லையோ! டிரிங்—என்றாள் அவள் "ஒரு முறை இதை அருந்திய பின் சாராயத்தின் போதை ரொம்ப குருட் (crude)டாக இருக்குமோ?"

நீ எதற்காக இதை எடுத்து கொள்கிறாய்? "முதலில் க்யூரியாசிடியின் காரணமாய் எடுத்துக் கொண்டேன்"—நிதானமாகப் பேசினாள் அவள் எஸ்கேப் போலக் பிறகு பிடித்தது. நன்றாக இருந்தது. உணர்வுகளெல்லாம் மிகத் தீவிரமாகி விடுவதால்.........

"நானும் எஸ்கேப்பிற்காகத்தான் வந்தேன்" ஸ்டீபனின் ஸ்பரிசத்தில் உஷ்ணமோ, வேகமோயில்லை மெதுவாக......டெண்டர்னெஸ் நிறைந்தொரு ஸ்பரிசம்.

"நாள் முழுவதுமாக என்னை இழக்கமுடியவில்லை. ஒருவருடம் வரை வியட்நாமில் போரிட்ட நினைவுகள் இன்னும் மங்கவில்லை 'ஹை'யான பின்னும் இவை தான் கண்முன்னே வருகின்றன.''

"நீ அதைப்பற்றிநினைக்கவிரும்பவில்லையா? நான் வாழ்ந்ததைப் பற்றிச் சிந்திப்பதற்கு என்ன பயம்?" மெதுவான குரலில் அவள் பேசினாள்.

அந்த அனுபவங்கள் எப்படியோ! அதைப் பற்றி இன்னொரு நாள் பேசுவோம்—என்றான் ஸ்டீபன். இல்லாவிட்டால் செத்துப் போன வியட்காங்குகளின் முகங்கள், அமெரிக்க முகங்கள் உன்னையும் ஹாண்ட் செய்யத்துவங்கிவிடும்.

அவள் எழுந்து நின்றாள். அவள் கரம் தன் பிடியிலிருந்து விலகுவதை ஸ்டீபன் தடை செய்யவில்லை.

புல் எத்தனை குளிர்ச்சியாக இருக்கிறது என்பதை அவளது வெறுங்கால் உணர்ந்தன.

ஓர் துளி அவளது நெற்றியின் மீதும் விழுந்தது.

அவளுடைய கணவனையும் பல ஆடவர்களின் முகங்கள் 'ஹாண்ட்' செய்கின்றனவா? நாளைக்குத்தங்கள் இருவரின் அறைகளுக்குநடுவே யிருக்கிறகதவைத் தாழிடாமல் திறந்தே வைப்பாளா?

அவள் திரும்பிப்பார்த்தாள். ஸ்டீபன் சோபாவில் நிச்சலனமாய் படுத்திருந்தான்.

பறந்து கொண்டிருந்த திசையறியா பலூன் காற்று குறைந்தபின் மெல்ல மெல்ல கீழே இறங்கி வருவதைப் போல் அவள் மெல்ல மெல்ல இறங்கிக் கொண்டிருந்தாள்.

ஹிந்தி: உஷாபிரியம்வதா

தமிழில்: சரஸ்வதிராம்நாத்

---

# மௌனியின் 'தவறு' பற்றி...

தர்மு அரூப் சிவராம்

தனது குணங்களையும் அவற்றிலிருந்து விளையும் காரியங்களையும் கொண்டு தனக்கு விசேஷத்தன்மை கொடுப்பவன் ஜீவன் எனலாம். மனித ஜீவன் இவ்வகையில் முதிர்ந்தவன்.

குணங்கள் அவனிடத்தில் படிந்து தங்களது கூட்டான ஒரு உருவம் என அவனை ஆக்குகின்றன. உலகத்தோடு அவன் தொட்டுக் கொள்ளும் அன்று துவங்கி இந்த உருவேற்றம் அவனுக்கு நேர்ந்து கொண்டிருக்கிறது. சாவிலும் இவை மலரைப் பிரிந்த 'வாசனை' போன்று அவனை சா வாழ்வினூடேயும் அருப உருவாக்கி தமது கூட்டுருவே அவனுரு எனக்கொண்டு செல்லலாம். எனவே குணங்கள் அற்றநிலையில் ஜீவனின் தன்மை எத்தகையது என (குணங்களை விருத்தி செய்வதை ஒழித்து, அவற்றை ஆராய்ந்து மீற முடியுமோ எனக்கண்டு மீறியோ, வேறு ஏதோவொரு விதத்தில் அவற்றை உதிர்ந்து விழச் செய்தோ) அறிவது வாழ்வின் சிகர சுவாரஸ்யமாகும்.

ஆனால் குணங்களைப்பிரிந்தும் பழக்க வசதிலோத் யத்திலோ வேறு குணங்களை மாற்றிப் பிடித்துக் கொள்கிறோம். குண விசேஷங்களின் வசப்பட்டுள்ளதின் அபத்தம் இந்த மாற்றிப் பிடிக்கும் கணத்தில் வெளிப்பட ஏதுவுண்டு. ஒரு குணத்தை நீத்து இன்னொரு குணத்தை ஏற்கு முன் இடைவெளியில் உள்ள மௌனம்தரும் ஒளியிலா இது? அந்த இடைவெளியே தன்னை நிலை நிறுத்தி குணங்களுக்கு இடம் தரா விட்டால் ஜீவன் கொண்டுள்ள குணவிசேஷங்கள் யாவுமே, மனிதத் தன்மையே, கயிற்றில் தெரிந்த அரவென மறையக்கூடும். இடைவெளியென ஆரம்பத்தில் பட்ட அதுவே வாழ்வின துவக்க இடமாகவும் முடிவிடமாகவும் ஒரு அதிர்ஷ்ட அருள் கணத்தில் தெரியவந்து, அதிலிருந்து ஆரம்பித்து அங்கேயே திரும்பவருவது எனவோ இடையில் இறங்கிமௌனத்தில் மறைந்து தானற்று விடுவதோ என எதுவும் ஆகலாம். அப்போது உலகு கனவைவிடப் பலமற்ற 'கனவின் சாயை' ஆகவும் போய்விடலாம்.

சேவலின் ஒளி நாடும் குரல் உடலற்ற தன்னியல்பை நீத்து 'பனை, தென்னை, ஆடு, மாடு, நாயெனவும்' உடலேற்க அலைவதுபோல், தான் தானற்ற தன்மைகளுடன் சார்ந்து 'நான்' என ஆகியதே அடிப்படை error — தவறு. தன்னைப் பற்றிய இத் தவறே காணும் உலகின் மீதும் படிகிறது. தன்னைப்பற்றிய குணங்களினூடே உலகும் நல்லது கெட்டது என்பது போன்ற எதிரிடைகளின் வசப்படுகிறது.

மேற்படி விபரங்கள் இக்கதையில் சரியாக வந்துள்ளதாகவே நான் உணர்கிறேன். இதற்குள் இக்கதையின் விஷயாம்சத்தைப் பற்றிப் பேசுவது உரை யெழுதுவதாக வந்துவிடக்கூடும். டெர்மினஸ் ரயில்வே ஸ்டேஷன் இஸ் ஈக்குவல் டு திஸ். எக்ஸ்ட்ரா எக்ஸ்டராக்களெல்லாம் நவீன தமிழிலக்கியத்தை கலாசாலைப் பண்டிதத் தூக்கு மேடைக்கு அனுப்ப வழி வைக்கக் கூடும். பரீட்சை பாஸ் செய்வதற்கென பிறவியெடுத்தவர்களுக்காகவா நாம் இலக்கியத்தை ரசித்துக் காட்டுகிறோம்?

*　　　　*　　　　*

ஆனால் இக்கதைப் பற்றி ஒரு பிரச்னை. ரயில்வே ஸ்டேஷன் என்ற, குழப்பங்களுக்கு இடம் தந்தும் தானசைவுறு 'மௌனப் புதிர் க்ஷேத்திரம்', கதையில் வரும் இடத்திலிருந்துதான் மேற் சொன்னவை வெளிப்படுகின்றன எனத் தோன்றலாம். 'அவளை' விட்டு 'இன்னொருவனுடன்' வாழும் 'அவள்' என்ற விபரமும் இன்னொருவனுக்காக அவன் காத்திருந்து அவனைத் தேடியெனச் சொல்லல் என்பதும் எப்படி மேற்சொன்னரயில் வசப்படுதலுடன்சேரலாம்?

இவ்விடத்தில்தான் உரையாசிரியத் தன்மையுடன் 'அவன்' 'அவள்' 'இன்னொருவன்' என்ற அம்சங்களை விளக்க வேண்டியுள்ளது. ஆனால் மௌனி கதை எதுவுமே allegory அல்ல. அலிகொரி என்பது விடு கதை போன்ற விவகாரமே. மௌனி உண்மையில் குறியீடுகளைப் (symbols) பயன் படுத்துபவர். ஆகவே தான் உரையாசிரியத்தனமாக அவர் கதையை அணுகுவது அணுகுபவனையே குழப்பும் காரியமாகும்.

இங்கு காத்திருத்தல் என்ற actionஐயே — காரியத்தையே — எடுத்துக் கொள்ளும்போது அவன் இன்னொருவனைக் காண்பதென்பது, ஒரு குணம் இன்னொன்றாக மாறுமுன் உள்ள இடைவெளியை நோக்கியுள்ளது எனக் காணலாம். 'அவள்' புலன் வாழ்வெனலாம். ஆனால் காத்திருந்து நகர்கையில் சந்தித்த ஆயிரம விளக்கொளி ஆரம்ப முடிவிடம் — பொருட்டற்றவையான குண பேதங்களுக்கு அநாயாசமாக இடம் கொடுத்தும் தான் தனித்து நிற்கிறது. மயக்கத்திலிருந்து ஒருவன் தான் அறிய நீங்க முடியாது எப்படிதான் அறிய ஒருவன் நித்திரை போக முடியாதோ, அப்படி எனவே தானறியாதே ரயிலேறி ஒரு பிரமையைப் பிரமையெனக் காட்டும் பயணத்தின் வசப்படுகிறான். அவன் — புலன் (அவள்) வசப்படும் இன்னொருவனாக மாறக் காத்திருந்தும் அவ்விதமாகாமலே.

இந்த இடத்தில் பால் (sex) காரி — உடனிகழ்வாக உள்ள 'அவனுக்கு' வசப்படத் தக்கவள் என வருகிறாள். இன்னொருவனிடமுள்ள அவளுக்கும் இவளுக்குமிடையே உள்ள பேதம் கைவசப்பட உள்ள புலனனுபவத்துக்கும், நேற்றனுபவித்து மீண்டும் நுகர அவன் வேட்கும் புலனனுபவத்துக்கும் உள்ள பேதமே. ஆனால் இன்று என்ற 'அவன்' நாளை என்ற இன்னொருவனாகாது 'யாரோ ஒருவனாக' (கடவுளாக?) உலகை கனவினும் நொய்வான அதன் சாயை என்று கண்டு கொண்டிருக்கையில் கைவசப்பட உள்ள புலனனுபவமும் கழிந்து செல்கிறது. ஏனெனில் அவன் இங்கு இந்த அறையுள்ளிருந்தும் இங்கில்லை, ஒரு பயணத்தின் அங்கமாக இருக்கிறான்.

இந்த அர்த்தத்தை கூடமாக ஒரு உள்ளுணர்வென 'தவறு' கதை தெரிவிக்கிறது. அவ்வுணர்வை கதை படிக்கும்போது கொள்கின்ற கணங்களை, இங்கே வார்த்தைகளாக்கியதைத்தான் நீங்கள் காண்கிறீர்கள். வெறும் 'உரை' எழுத நான் முயலவில்லை — ஆனால் 'உரை'யாகவே இது நின்றுவிட்டால் நான் குற்றவாளி — பண்டிதர்களுக்கு இடம்தரும் குற்றத்தைச் செய்தவன். பண்டிதர்களுக்கும் புதிய பண்டிதர்களுக்கும்.

இதற்கும்மேல் சென்றுதான் நாம் இனி கதையின் நயங்களை ரசித்துக் காட்டவேண்டும். என்னளவில் 'தவறு' திரும்பத் திரும்பப் படித்து மனசின் பக்குவத்தை இக்கதையின் பாதிப்புக்கு தந்து ரசிக்கத் தக்கது. ●

# அபிப்பிராயங்கள்

பரீட்சை ஹாலில் 'SANSKRIT' என்று பெரிதாக போர்டு எழுதி வைத்து அதன் கீழே இருபதுக்கும் மேற்பட்ட சம்ஸ்கிருதப் புத்தகங்களை வைத்திருந்தார்கள்.

ப. நா. பாலசுப்பிரமணியன், சென்னை-5

நா. ஜெயராமன், மௌனி கதைகள் நன்ருக இருந்தன. கவிதைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறீர்கள். இவ்வளவு கவிதைகள் என்ருல் நிச்சயமாக நம்மால் சர்வதேச லெவலுக்கு உயராவிட்டாலும், இங்கு ஒரு விழிப்பு ஏற்பட வழி இருக்கத்தான் செய்கிறது. திரு. சா. கந்தசாமி கட்டுரை—'பாசறை'—நன்ருக இருக்கிறது.

குமரித்துறைவன், திருப்பதிசாரம்.

இதழிலேயே மிகச் சிறப்பான பகுதி நா ஜெயராமனின் 'பூட்ஸைக் கழற்றி' அவருக்கு வாழ்த்துக்கள். ஞானக்கூத்தனின் கவிதை — It is A one. உங்கள் கடைசிப் பக்கம் மிகவும் வேகமாகவும், பொருத்தமாகவும் சூழ்நிலையைக் குறிப்பிட்டுச் சுட்டுவதாகவும் இருக்கிறது. இந்தக் கடைசிப் பக்கத்தைத் தொடர்ந்து எழுதுங்கள். இது மிக முக்கியம்.

'நகுலன்' திருவனந்தபுரம்.

'கசடதபற'வை தயவுசெய்து மாதம் இரு முறையாக்க முயற்சி செய்யுங்கள். ஒரு இதழைப் புதிய தலைமுறைக்கும், மற்ருெரு இதழைப் 'பெரிய' கைகளுக்கும் அளியுங்கள்.

இரா. கதைப்பித்தன், இராஜபாளையம்.

பத்திரிகை நன்ருக இருக்கிறது. தமிழுக்கென்று ஓரிரண்டு இலக்கியப் பத்திரிகையாவது இருக்கிறதே என்ற நினைப்பே ரொம்பவும் தெம்பாக இருக்கிறது.

சா. வைத்திலிங்கம், புதுவை.

தினமணிகதிரைப்பொருட்படுத்தாதீர்கள். எல்லா விஷயங்களிலும் நடப்பதுபோல தமிழிலக்கியத்திலும் Gresham's Law நன்கு செயல்பட்டு வருவதுதான் தெளிவாகிறது.

வீனஸ், புதுடெல்லி-5.

இன்று நா.பா.வின் தொனி மாறியிருக்கிறது. அன்று, அந்த அக்டோபரில் முத்துசாமி போட்ட போடுதான் நா.பா.வை ஒழுங்காகப் பேசச் செய்திருக்கிறது என்பதுதான் என் கருத்து. புதுக்கவிதை ஆதரவாளர் என, நடை, எழுத்து, கசடதபற இதழ்களைப் பற்றிச் சொல்பவரென மாறிவிட்ட பார்த்தசாரதியின் கோலத்திற்குப் பின்னல் அவரது அசல் சந்தர்ப்ப வாதம் தென்படுகிறது. இதை ஏன் சுட்டிக்காட்ட கந்தசாமி பயப்படுகிருர்?

மு.வ.வின் இலக்கிய வாழ்க்கை பற்றித்தான் 'கசடதபற'வின் வாசகர்களுக்குக் கவலை. வரதராஜனரின் personal status பற்றியோ, வாழ்க்கை பற்றியோ நமக்குக் கவலையில்லை. எனக்கு வரதராஜனர் ஒரு தமிழ் வாத்தியார் என்பதற்கு மேல் வேறு எந்த மதிப்பும் அவர்மேல் கிடையாது. அவர் கட்டுரையாளர், நாவலாசிரியர், இத்யாதிவிஷயங்கள்எல்லாம்வேருெரு கோஷத்தின்மேல் எழுந்த அர்த்தம் இழந்த சப்தங்கள். என்ருலும் கந்தசாமி மு.வ.வை இப்படி முடிச்சுப்போட்டு இறக்கவேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

ட்டி. ஆர். நடராஜன், மதுரை-3.

கவிதைகளில் 'ஹமார் பாரி, துமார் பாரி, நோக்ஷல் பாரி', 'செருப்புக்கள்', 'தேரோட்டம்' சிறக்கின்றன. வல்லிக் கண்ணனின் பால்சாக் சித்திரம் அருமை. புதுமை ஓவியர்களைக் கசடதபற பயன்படுத்திக் கொள்வது காண மகிழ்ச்சி பொங்குகிறது.

ஸி. ஆர். ராமானுஜம், புனு-11

மௌனியின் கதையைப் பொறுத்தவரையில்—கசடதபறவின் ஐந்தாவது இதழ் குறைந்தது இன்னும் ஐந்துவருடங்களுக்கு எனக்குப் புதிதாகவே இருக்கும். 'புனித ஜெனே', 'பார்க்கப் போனல்' — இலக்கியத் தேடலில் ஈடுபட்டிருக்கிறவர்களுக்கு உரமூட்டும் விஷயங்கள். 'கண்ணகி', 'பர்ட்ஸ் வ்யு', 'தீண்டாமை' போன்ற கவிதைகள் clever observations pertinent questions என்று சொல்லலாம். 'விடலைகள்' கவிதை பழைய விஷயத்தைப் புதிய முறையில் effective ஆகச் சொலகிறது. 'பூட்ஸைக் கழற்றி' — 'An individual who is not able to conform with the norms of society but forced to' என்கிற உண்மை பின்புலத்தில் ஓரளவிற்குத் தெளிவாகவே விழுந்திருக்கிறது.

பாஹேஸ்வரி, சென்னை-21.

காலவெள்ளத்திலே பழைய பத்திரிகை ஏடுகளைப் பட்குகளாகக் கொண்டு எழுத்தாளர்களாகத் திக்குமுக்காடும் என் போனறவர்களுக்குக் கசடதபறபோல எத்தனையோ கடல்மூழ்கிகள் தேவை.

லெமன், சென்னை-8.

பத்திரிகையின் அளவை மாற்றியாக வேண்டும். காரணம், அது பிரபலமிலலாத ஒரு சைஸ். இன்னும் சில பக்கங்களை அதிகரித்து, ஆர்ட் காகிதத்தில் நவீன ஓவியங்களுக்கு முக்கியதநுவம் தந்து அட்டைபோட வேண்டும்.

கே. வி. ராஜாமணி, பிஹார்.

# வந்தது

கி. ராஜநாராயணன்

அவன் பஸ்ஸிலிருந்து இறங்கி வெதுவெதுப்பான தரையில் கால வைத்ததும், சத்தமில்லாமல் பஸ் வழுக்கிக் கொண்டுபோய் மறைந்து விட்டது.

இரண்டு பர்லாங் தூரம் இருக்கும் ஊர். ஒரு சுடு குஞ்சியைக் கூட காணோம்!

போதை நிறைந்து வழியும் குடிகாரனது. போல அவனுடைய பிரக்ஞையின் வட்டம் சுருங்கி இருந்தது.

நிலவின் பிரகாசம் தெளிவாக இருந்தது. வழியில் சிதறிக் கிடக்கும் காக்காப்பொன் துகள்களில் நிலவின் பிரகாசம்பட்டு அவை மின்னின. நிரம்பிய குட்டங்களில் தண்ணீரின் சூடு இன்னும் ஆறாததால் அதிலிருந்து அடிக்கும் அவைகளின் சுவாசம் வெப்பமாக இருந்தது. சில்வண்டுகளின் இடைவிடாத இரைச்சல் கேட்டுக் கொண்டே இருந்தது.

அவன் கம்மாய்க் கரையோரம் வந்தபோது அவனைக் கடந்து இரண்டுபேர்கள் போனார்கள். அவர்களை அவன் எங்கோ பார்த்திருந்தானாயினும் ஜாடை பிடிபடவில்லை அவர்கள் ஒரு பன்றியை நாலு கால்களையும் சேர்த்துக்கட்டி ஒரு நீளக்கம்பில் காவட்டு போட்டுத்தோளில் வைத்துக் கொண்டு நடந்தார்கள். பன்றியின் வாயைப்பனை நாரினால் இறுக்கிக்கட்டியிருந்தார்கள். வாலை அதன் ஒரு தொடை யிடுக்கில் இழுத்துச் சொருகியிருந்தார்கள்.

முன்னால் சென்றவனுக்குஒரு கண்ணைக்காணோம். அது இருந்த இடத்தில் ஒரு ஆழமான கிடங்கு மட்டுமேயிருந்தது. மூக்கு, நெற்றியின் நடு மேட்டிலிருந்தே தொடங்கியிருந்தது. ஒரு கருப்பு நிறத் துண்டை இடைவாருக்குப் பதிலாக இடுப்பில் இறுக்கிக் கட்டியிருந்தான். மாரில் கரும் புல்லாய் மயிர் அடர்ந்திருந்தது. வலதுகால் பெருவிரல் நீண்டு இடது பக்கம் கோணியும், இடதுகால் பெருவிரல் நீண்டு வளர்ந்து வலது பக்கம் கோணியும் இருந்தது.

பின்னால் சென்றவனுக்கு, வலது புஜத்திலிருந்து கை வள்ளிசாகஇல்லை. பீச்சாங் கையினால் மட்டுமே காவட்டைப் பிடித்திருந்தான். அவனுடைய நடுமுதுகில் கிளி மூக்கு மாம்பழம் அளவு ஒரு கழலை தொங்கிக் கொண்டிருந்தது. அதன் நுனியில் முலைக்காம்பைப் போல ஒரு பாலுண்ணிமிருந்தது. வலது காலைவிட இடது கால் கொஞ்சம் குட்டையாக இருந்ததால் கிந்திக் கிந்தி நடந்தான்.

பக்கத்தில் எங்கோ குழ்ந்தை அழும் சத்தம் கேட்டது. அவர்கள் உடனே வேகமாக நடக்க ஆரம்பித்தார்கள்.

‘ஆடிக்கு இன்னும் நாட்கள் இருக்கிறதே. அதற்குள் என்ன பன்றி வேட்டை!’ என்று நினைத்துக் கொண்டான்.

ஊருக்குள் யாரையுமே காணோம். வீடுகளின் கதவுகள் எல்லாமே விரியத் திறந்தது திறந்த மானைக்கே கிடந்தன.

தெருச் சுவரடிகளில் கொக்கராளிச் செடிகள் வளர்ந்து அடர்ந்து போயிருந்தது. வீடுகளை இணைக்கும் சந்துக் குறுக்குச் சுவர்களின் மேல் கரும்பச்சை வெல்வெட்டாய் பாசி படர்ந்து போயிருந்தது. சிலதில் சுவரொட்டிச் செடிகள் காணப்பட்டன.

ஒரு வீட்டின் முன்னால் ஆரத்தி சுற்றி வாங்கிய சென்னீர் கொட்டப்பட்டிருந்தது. இன்னொரு வீட்டின் தெருமுற்றத்தில் ஒரு மண் குடத்தில் நிறைநீர் வைத்து வேப்பங்குழைக் கொத்தால் கும்பம் வைக்கப்பட்டிருந்தது. வீட்டு வாசலிலும் வேப்பங்குழை சொருகப்பட்டிருந்தது அந்த வீட்டை வேகமாகக் கடந்தான்.

பக்கத்துத் தெருவில், ராப்பாடியின் கனத்த கீழ்ஸ்தாயியில் நடுங்கிப் பாடுங்குரலும் மணியோசையும் கேட்டு அவனுடைய உடம்பு புல்லரித்தது.

ஊர் பூராவையும் சுற்றிச் சுற்றிப் பார்த்தாகிவிட்டது. அவனுடைய வீட்டைக் காணோம்!

ஊருக்கு வடக்கே சற்றுத் தொலைவிலுள்ள பள்ளிக் கூடத்துக்குப் போனான். ஒரு வேளை அங்கே அவனுடைய குழந்தைகள் யாராவது இருக்கலாம். ஆனால் அங்கேயும் ஒருத்தரையும் காணோம். சுவரில் சாத்திவைக்கப்பட்டுள்ள ஒரு கரும்பலகையின் இடுக்கில் ஒரு பெரிய கருப்புப் பூனை மட்டும் நெருப்புக் கங்குகளைப் போல கண்களை வைத்துக்கொண்டு அவனையே குர் என்று பார்த்துக்கொண்டேயிருந்தது.

ஊரைச் சுற்றி, திரும்பவும் கம்மாய்க் கரைக்கு வந்தான். கரை நெடுகிலும், காய்ந்து இற்றுப்போன பனம் பூவின் துணுக்குகளைப் போல உலர்ந்த மனித மலங்கள் அங்கங்கே கிடந்தன.

கம்மாயின் தண்ணீர் வற்றிய தரையில், லாட சன்யாசிகள் நாலுபேர் அரளைக் கற்களை கூட்டி வைத்து சமையல் செய்வதற்காகத்தரையைத் தோண்டிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் கொஞ்சம் தெற்கே தள்ளி, ஒரு கிழவி; சோப்பு நுரையாய் நரைத்திருக்கும் பரட்டைத் தலை தொங்கிய கீழ்உதடு. ஒரு பல் கிடையாது. அரிவாள் மணையில் நறுக்கிக் கொண்டிருந்தாள். அவளுக்கு எதிரேயிருந்த மண் சட்டிக்குள்ளிருந்து குழந்தையின் இரண்டு கைகளும் ஒரு காலும் வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. கிழவி, குழந்தையின் மற்றொரு காலை அரிவாள் மணையில் வைத்து நறுக்கிக் கொண்டே அழுது கொண்டிருந்தாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் வருவதற்குப் பதிலாக அவளுடைய வாயின் இருபக்கங்களின் வழியாகவும் நீர் சொட்டிக் கொண்டேயிருந்தது.

அதுக்கும் கொஞ்சம் தெற்கே தள்ளி, ஒரு நரிக்குறத்தி; ஆலமரத்தின் தரையூன்றிய விழுது ஒன்றின் மேல் சாய்ந்து கொண்டு, மடியில் ஒரு நரிக்குட்டிக்கு தன்னுடைய செழிப்பான மாரைத் திறந்து பால் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு வனஸ்பதி டப்பா நிறைய கம்மஞ் சோறும் ஊறுகாயும் இருந்தது. மாரிலிருந்து பால் இறங்குகிற

சோகத்தில் அவள் லயித்துக் கண்களைச் சொருகி மூடி மூடித் திறந்தாள்.

அவளுக்குப் பக்கத்தில், வேலி அமைத்ததுபோல பாம்புக் கூட்டங்கள் ஆள் இடுப்பு உசரத்துக்கு வாலைத் தரைகளில் ஊன்றி நின்று கொண்டு பல ஜோடி ஜோடிகள் ஒன்றையொன்றுபின்னிக்கொண்டு பிணைசலாடிக் கொண்டிருந்தன. நல்ல பாம்பும் நல்ல பாம்பும்; சாரைப்'பாம்பும் நல்ல பாம்பும்; இப்படி.

அவன், பையப் பின் வாங்கி தண்ணீரைச் சுற்றி அலவாக் கற்களின் மேல்கால்வைத்து ஏறமுயன்றான். 'கோடித் துண்டு கொண்டு வராமல் போனமே. புதூப் பட்டுத்துண்டு இருந்தால்தான் நல்லது. அப்படியே பிணைசலாடிக் கொண்டிருக்கும் பாம்புகளின் மேல் போட்டிருக்கலாம். வீட்டுக்குப் போய் இனி துண்டு எடுத்துக் கொண்டு வருவதுக்குள் அவைகள் விடுபட்டுப் போய்விடலாம்'

தக்கி முக்கிக் கரையேறி நின்றபொழுது, கரை மரத்தின் வேர்களில் கட்டியிருந்த காய்க்காளை அவனைக் கண்டதும் செறுக்கு போட்டு கொம்புகளால் தரைமண் குத்தி வீசியது. வாலை நிமிர்த்தி சீத்தடித்து கட்டுகளை அறுக்க முனைந்தது.

ஒரு கட்டு அறுந்து விட்டது, இன்னொரு கட்டு அறுந்து விடுவதற்கு முன் அங்கிருந்து தப்பித்தாக வேண்டும்.

திரும்பவும் கம்மாய்க்குள் இறங்கி வேறு வழியாக அவர்களுடைய சாலையை நோக்கிப் போனான். அங்கே அவனுடைய மனைவி குழந்தைகள் எல்லாருமே இருந்தார்கள்.

கம்மங்கதிர்ச் சாணையை இழுத்து வட்டம் போட்டிருந்தார்கள் பிணையலடிக்க மாடுகள் தயாராய் நின்று கொண்டிருந்தன வேலைக்காரர்கள் பிணையற்கண்ணிகளால் மாடுகளை ஒரு பிணையலுக்கு நாலு மாடுகள் வீதம் இணைத்துக் கொணடிருந்தார்கள். ஐந்து பிணையலுக்கான மாடுகளும் தயாராய் நின்று கொண்டிருந்தன. முழங்கால் உயரத்துக்கு வட்டம் இருந்தது. சக்கைப் பிறட்டிகள்,பொலிப் பலகைகள்,வாளிப்புமார்கள், கடகங்கள், சுளகுகள் முதலிய எல்லாவற்றையும் களத்தின் ஒரு மூலையில் தயாராய் வைக்கப் பட்டிருந்தன.

அவனுடைய இரண்டு வயசுக் கடைக்குட்டி அவளுடைய .அம்மாவிடமிருந்து அவனிடம் வரத்தாவிக் கொண்டிருந்தாள். அவன் அதைப் பாராதது போல பிராக்குப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டு அவனுடைய மனைவிரஸித்துச்சிரித்துக் கொண்டிருந்தாள்!

பிணையல் மாடுகள் வட்டத்தை நோக்கி கதிர் தின்னும் ஆவலில் வேகமாகப் பாய்ந்து வந்தன. வேலைக்காரர்கள், "பொலி பொலி பொலி" என்று உரக்கச் சொல்லி பிணையலை அதிவேகமாகச் சுற்றவிட்டார்கள். அவனும்ஒருபிணையலைப்பத்தினான். மருண்டு விரண்ட மாடுகளை மடக்கி வட்டத்துக்குள் அடித்து சுற்ற விட்டார்கள்.

திடீரென்று அவன் மனைவியின் கூக்குரல் கேட்டு பிணையல் நின்றது.

ஐயோ எவ்வளவு கோரம்!

அவர்களுடையகடைக்குட்டி பிணையலுக்குள் எப்படியோ அகப்பட்டு மாடுகளின் கால்களில்மிதிபட்டுநசுங்கிச்சிதைந்து விட்டது. பிணையல் கயிறையும்சாட்டைக் கம்பையும் போட்டு விட்டு குழந்தையைக்கையில் எடுத்தான், சக்கை பாதியும் பொலிபாதியுமாகியிருந்த வட்டத்தில் மண்டியிட்டு, நசுங்கி இறந்து போன அவளை மடியில் இருத்திக் கொண்டு துக்கத்தால் குலுங்கினான்.

இந்த கோரமான வேதனையை அவனால் தாளமுடியவில்லை. வாய் விட்டுக் கத்த முடியவில்லையாதலால் அப்படியே வட்டத்தின்மேல் படுத்து கண்மூடி அழுது கொண்டிருந்தான். அவனுடைய மனைவி சோகத்தோடு அவன்தோள்மீது கைவைத்தாள். சூடான அவளுடைய கையின் ஸ்பரிசம் பட்டதும் அவன் விழித்து அவளுடைய முகத்தைப் பார்த்தான். அவள் புன்னகை செய்தவாறு அவனுடைய முதுகைத் தடவினாள். எழுந்து உட்கார்ந்தான். விளக்கு தூண்டிவிடப் பட்டிருந்தது பக்கத்தில் அவன் மனைவி அவர்களுடைய கடைக்குட்டிக்குப் பால்கொடுத்துக் கொண்டிருந்தாள் அமைதியாக.

குழந்தையை அவன் கூர்ந்து பார்த்தான்.

ஆனந்தமாக அது பால் குடித்துக் கொண்டே அவனைக் கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டு ஒரு கையால் மற்றொரு முலைக் காம்பை வருடிக் கொண்டிருந்தது.

---


## Form IV

( SEE RULE — 8 )

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | — No. 1, Devadi Street, Mylapore, Madras-4. |
| 2. | Periodicity of its Publication | — Monthly |
| 3. | Printer's Name | — M. K. Swamy |
| | Whether Citizen of India | — Yes |
| | If Foreigner, state the Country of Origin | — |
| | Address | — No. 8, Mundakakanni Amman Koil Street, Madras-4. |
| 4. | Publisher's Name | — N. Mahaganapathy |
| | Whether Citizen of India | — Yes |
| | If Foreigner, state the Country of Origin | — |
| | Address | — No. 47, Nallathambi Mudali Street, Madras-5. |
| 5. | Editor's Name | — N. Krishnamoorthy |
| | Whether Citizen of India | — Yes |
| | If Foreigner, state the Country of Origin | — |
| | Address | — No. 1, Devadi Street, Mylapore, Madras-4. |
| 6. | Names and Addresses of Individuals who own the News paper and Partners or Share-holders holding more than one per cent of the total capital | — N. Mahaganapathy, No. 47, Nallathambi Mudali Street, Madras-5. — |

I, N. Mahaganapathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date 1—3—1971 (Sd.) N. Mahaganapathy
*Signature of Publisher*

(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

வளர்ச்சியின் எடுத்துக்காட்டாகச்சொல்லலாம். இதன் முடிவை முக்தியென்றோ, பிரம்ம நிலையென்றோ, நிர்வாணம் என்றோ, அகண்ட மானுஷம்என்றோ கம்யூனிஸம் என்றோ அவரவர்களுக்கு ஏற்றபடி குறித்துக் கொள்ளலாம். இவையெல்லாவற்றுக்கும் பொதுவாக இருக்கும் ஒரு சரடு ஒரு மனிதனின் பார்வை தனக்குள்ளேயே திருப்பப்பட்டு அவிந்து விடாமல், விரிந்து அகில அண்டங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டுவிட வேண்டும் என்கிற கவித்வமான கற்பனையே. இதிலிருந்து நான் புரிந்து கொள்வது கவிஞன் மனிதனை நேசிக்கும், தன்னையும் அவர்களில்ஒரு மனிதனாகக் கருதும் மனிதாபிமானக் கண்ணோட்டம் உடையவனாக ஆனால் அவன் கவிதை வளமும் உரமும் பெற வழியுண்டாகிறது. மாறாக அவன் மனிதவிரோதியாகவும் சுய விரோதியாகவும் ஆகும்போது அவன் கவிதை கவிமரபுக்கே மனித வாழ்வின் மரபுக்கே எதிர்நீச்சல் போடுவதாகிறது. புதுசானாலும் பழசானாலும் அவன் கவிதை வெறும் புழுக்கப்பெருமூச்சாகவும் தாப அழுகையுமாக மக்கிவிடுகிறது.

• புதுக்கவிதை எழுதும் பலர் படித்த மத்தியதர வகுப்பிலிருந்து முளைப்பவர்கள். இதனாலே அவர்களுக்கு (என்னையும் சேர்த்துத்தான்) ஒரு வக்ரப் பார்வை வந்து விழுந்துவிடுகிறது. இது ஓரளவுதான் வரவேற்கப்பட வேண்டியதுஎன்று நான் நம்புகிறேன். இப்பார்வையின் முக்கிய அம்சங்கள்: அறிவுப் பரப்பு, அதனால் ஏற்படுகிற தன்னம்பிக்கை, செருக்கு, தன் வகுப்புத் தர்மங்களே எல்லாவற்றுக்கும் மேலானவை என்ற பிரமை, மூவாசையோடு புகழாசை சேர்த்த நாலாசை மேல் ஊமைக்காதல், தன் வகுப்பின் கையாலாகாத்தனத்தினால் ஏற்படுகிற மனமுறிவு, வக்ரமான தனித்துவம், தங்கள் மேலேயே ஏற்படும் இரக்கமும் வெறுப்பும், பலஹீனமான கோழைத்தனம். இவ்வர்க்கத்திலிருந்து உதிக்கிற கவிஞனுக்கும்இவையெல்லாம் அவனறியாமலே இருக்கும். இந்தப் பின்னணியில் அவனுக்கு மனமுறிவை, சோர்வை, இருளை, மயக்கத்தை, வெறுப்பை, புதிரை, வீணை, மனோகரமான சாவை ஒரு தத்துவமாக உயர்த்திச் சொல்லத் தோன்றும். ஏக்கக் கவிகளும், வாழ்வை மறுக்கும் மனமுறிவுக் கவிதைகளும் தானாகப் பிறக்கும். தன் அறிவுத்திறனைக் காட்ட செப்பிடுவித்தை செய்யும் கவிதைகளையும் இதோடு சேர்த்துக்கொள்ளலாம். இதுவெல்லாம் அபினிப் பழக்கம் மாதிரி. சாப்பிடுபவனுக்கு இதமாகவும் மனோகரமாகவும் இருந்தாலும் புறவுலகத்துக்கு அவன் இருந்தும் இல்லாதவனாகிறான். அதனால் தான் இமைப்பொழுதும் சோராதிருத்தல கவிஞனுக்கு அவசியம்.

கவிஞன் மனிதகுலத்தின் மனச்சாட்சியாகவிளங்க வேண்டியவன். இல்லாவிட்டால் அவன் கவிக்குல தர்மத்தையே புறக்கணிப்பவனாக ஆகிறான். தனக்கு மாத்திரம், அல்லது தன் ஜாதிக்கோ வகுப்புக்கோ மாத்திரம் சாட்சியாயிருப்பவனைவிட தன் தேசத்துக்கும்மனித ஜாதிக்குமே சாட்சியாயிருப்பவன் உயர்ந்தவன் என்றுதான் நான் நினைக்கிறேன். தன்னுடைய சுய விருப்பு வெறுப்புகளில் மாத்திரமே கண்ணாடிப் பெட்டியில் அடைபட்ட ஈ மாதிரி சுழன்றுகொண்டிருப்பவன் வெறுப்பினடிப்படையில் பிறக்கும் இரக்கத்துக்குப் பாத்திரமாகிறான். என்னைப் பார்த்துப் பிறர் பரிதாபப்படுவதைவிட, அவர்கள் பெருமையடையவேண்டும் என்று நான் விரும்புகிறேன். என்னதான் புதுக் கவிதை எழுதினாலும், என்னுள், தன்னையும் பிறர் பரிதாபப்படுவதைவிட, அவர்கள் பெருமையடைய வேண்டும் என்று நான் விரும்புகிறேன் என்னதான் புதுக்கவிதை எழுதினாலும், என்னுள், தன்னையும் பிறர் மதிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிற மனிதன் தானே குடியிருக்கிறான்!

'இன்றில்லையானால் நாளைவரும்' என்று இருளிலும் சூர்யோதயத்தை எதிர்பார்க்கும் சக்தியுடையவனைத் தன்னை ஆக்கிக்கொள்ள வேண்டும். நடுத்தர வகுப்புக் கவிஞனுக்கு இருளும் மயக்கமும் சுயமாகவே வரக்கூடியவை. ஆனால் அதுவே மனிதஜாதிக்கு முடிவாக ஏற்பட்டிருக்கிற, எப்போதும் இருக்கக்கூடிய நிலையென்று நான் சொல்லமாட்டேன். சூர்யாஸ்தமனத்துக்குப்பின், 'செல்லும் வழி இருட்டு' என்று சொல்வதோடு கவிஞன் நின்றுவிட்டால் அவன் பலஹீனமானவனாக, மற்றவர்களையும் பலஹீனப்படுத்துபவனாக ஆகிவிடுகிறான். மனித ஜாதிக்கு இன்று ஒப்பாரியைவிட ஓங்கின குரல் தேவையாயிருக்கிறது.

'இருள் வந்து சூழினுமென்?
இசையொடுங்கிப் போயினுமென்?
அங்கமெலாம் திசையாகிக்
கங்குலிலே கரைந்திடுமென்?
இன்னும் சில மணியில்
உஷை வருவாள்'

என்கிற நம்பிக்கை தேவையாயிருக்கிறது. கவிக்கனவுகள் என்றும் கனவாக நிலைத்து விடுவதில்லை. நனவாகி விடுகிற வழக்கம் உண்டு அவற்றுக்கு.

அழகுணர்வோடு அறிவுணர்வும் மேல்தூக்காக நிற்கிறது புதுக்கவிதையில். இன்று நம் அறிவு பிரம்மாண்டமாக வளர்ந்து கொண்டேயிருக்கிறது. இந்த நிலையில், நம் தலையின் மேலே வைர வாள் தொங்கிக் கொண்டிருக்கிறது. அது மயிரிழையில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. ஆனால் அந்தஇழைதானாகஅறுந்து விடாது. அதைத்துணிக்கும் கத்தரியும் நம் கையில் தான். இவ்வைரவாளை ஒளிவிளக்காகப் பயன்படுத்திக் கொள்வதோ அல்லது நம்மை ஒழிக்கும் படையாகச் செய்வதோ ரெண்டும் நம் கையில் தான் இருக்கிறது. 'ஜீவன்கள் லீலையில் கூசாது கலப்போம்' என்று கவி கூறிய மனத்திண்மை இன்று நமக்கு அவசியம். ஏக்கக் கவிகளால் இத்திண்மை வளராது. இதைப் படைபாளிகள் உணர்ந்து தொழில் செய்தால், கவிக்கனவு மரணப்பாதையில் அல்லாமல் வாழ்வுப் பாதையில் சென்றால் மனித ஜாதியின் நனவும் வாழும். இப்பொறுப்பை, கடமையை நியதியை புதுக்கவிதை இயற்றுவோர் புறக்கணிக்க முடியாது. ஏனெனில் இது யாப்பிலக்கண விதியல்ல, மனித ஜாதியின் விதி.

(சென்னை, இலக்கியச் சங்கக் கூட்டத்தில் 21—1—1967 அன்று வாசிக்கப்பட்ட கட்டுரை)

●



'கசடதபற' தன்னுடைய பிரக்ஞையுள்ள வாசகர்களுக்குத்தமிழில் வெளிவந்துள்ள இலக்கியத்தரமான நல்ல புத்தகங்களை அறிமுகப்படுத்த விரும்புகிறது. தமிழில்தரமான புத்தகங்கள் என்று குறிப்பிடும் வகையில் வெளிவருவது மிகவும் குறைவு. அப்படி வெளிவரும் புத்தகங்களும் சரியானவர்களின் கண்களில் படாமல் போய்விடுகின்றன. அதை நினைவில் கொண்டு அவ்வப்போது 'கசடதபற'வின் வாசகர்களுக்கு நல்ல புத்தகங்களை அறிமுகப்படுத்தும் முதல் பட்டியல் இது. புத்தகங்கள் வேண்டுவோர் "வாசகர் வட்டம், 14, தணிகாசலச் செட்டித்தெரு, சென்னை-17" என்றமுகவரிக்கு எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

குருக்ஷேத்திரம்
தொகுப்பு: நகுலன்
விலை: ரூ. 8-00

உதய நிழல் (கவிதைகள்)
எஸ். வைதீஸ்வரன்
ரூ. 3-00

கரைந்த நிழல்கள் (நாவல்)
அசோகமித்திரன்
ரூ. 4-00

சாயாவனம் (நாவல்)
சா. கந்தசாமி
ரூ. 5-25

நிழல்கள் (நாவல்)
நகுலன்
ரூ. 1-25

காலை முதல் (சிறுகதைகள்)
கிருஷ்ணன்நம்பி
ரூ. 3-50

கதவு (சிறுகதைகள்)
கி. ராஜநாராயணன்
ரூ. 3-50

தலை முறைகள் (நாவல்)
நீல. பத்மநாபன்
ரூ. 5-00

நீலக்கடல் (சிறுகதைகள்)
கிருஷ்ணன்நம்பி
ரூ. 2-25

# இலக்கியப் போலிகள்

ந. முத்துசாமி

உலகத்தில் போலித் தனம்தான் விகாரமானது வெட்கமில்லாதது. அது எளிதில் கிரகிக்கக் கூடியவனை வெட்கப் படுத்துகிறது. இவ்வகையில் பிப்ரவரி கணையாழி வெட்கமற்றிருக்கிறது. ஆசிரியர் பக்கத்தில் நான்காவது பாராவின் கணையாழி எனத் தொடங்கும் வரியைத் தொடர்ந்து மேலே படித்தபிறகு அப்பக்கத்தை ஆசிரியரின் இடை மெலிவில் வல்லினம் போட்டு ஆச்சரியத்துடன் மாதர் பக்கமாக்கலாம் என்று தோன்றுகிறது. (இதற்கும் தன்மானமும் மனி விடுதலையும் உள்ள பெண் இனத்திற்கும் சம்பந்தமில்லை) இங்கு கசடதபறவையும கலைமகளையும்சேர்த்து 'நல்ல பணி'யில் பிணைக்கிறார். இது, இளம் வயதில் விதவையானவள், எனக்குத் தெரிந்து முப்பது வருஷங்களுக்கு முன், தன் முதுமைக் காலத்தில் காட்டிய விஷமத்தனத்தையொத்திருக்கிறது (உ-ம்: கமலாம்பாள் சரித்திரம்). தூரம் நின்ற அம்மாமிகளும், அம்மனப் பான்மையினரும் மத்யானம் தலைக்குயரக் கட்டை வைத்துக் கொண்டு, மூன்று நாள் பொழுதுபோக்கு படிப்பை முழுமாதமும் அரை இமைதிறந்து படிக்க உதவும் ஏடு கலைமகள். இதில் இலக்கியத்தைக்காண்பது, இதே ஆசிரியர் பக்கத்தில் வரும் பின் வரிகளில் மிகவும் தாழ்மை தொனிக்க அகம்பாவ தோரணையில் இலயக்கியம் பேசுவது போலித்தனம். இப்போலித் தனம்தான் இலக்கிய வளர்ச்சிக்குத் தடையாகவும் தீம்பாகவும் முடிகிறது. நிஜமான மனிதர்களின் நிஜமான உணர்ச்சிகள் அனுபவங்கள் பற்றிய கணையாழி கதைகளில் பண்பாட்டுப் பூசிமொழுகல் இல்லை என்பவர், முன் வரிகளில் கணையாழியின் மண் கூடத்தை ஏன் இப்படிச் சாணிச் சுருணை கொண்டு மொழுகுகிறார்? கதை, கவிதை, கட்டுரைகள் ஏதோ வகையில் அலாதியாக இருக்க வேண்டுமென்பவர் அடுத்த வரியில் ஏன் தந்தக் கோபுரத்தில் ஏறி சாக்கடையில் குதித்துக் குளிக்கிறார்? ஒரு கற்பனை வாசகனோடு ஏன் இந்த மத்யஸ்தம்.

இதே கணையாழியின் ஏழாவது பக்கத்தில் ஆர். சுவாமிநாதன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். பரிசளிப்பதில் சாகித்ய அகாடமிக்குள்ள நேர்மையை சந்தேகிக்கும் இவருக்கு மிழ் இலக்கியத்தில்தவிர்க்க முடியாத மௌனி படாமல் போனதென்ன? கோணல்கள் முன்னுரையில் 'அதீதக்கற்பனைஉலகம் ஒன்றைத் தன்சிறுகதையில் சிருஷ்டித்தவர் மௌனி. சாதாரண வார்த்தைகள் கொண்டே, முற்றிலும் புதிய, இலக்கியத்தரமான சூழ்நிலையை (atmosphere) உருவாக்க முடிந்தது இவரால்' என்றும், முன்னுரையின் மற்ற பகுதிகளிலும் மௌனியின் இலக்கியத்தரத்தை உயர்வாக (கு.ப.ரா. புதுமைப்பித்தன் மௌனி-மூன்றுபேர் என)க் குறிப்பிட்டு ஒத்துக் கொண்டவர், எம். வி. வெங்கட்ராமும், கிருத்திகாவும் நினைவில் இருக்க வௌனியை மறந்ததென்ன? சி. சு. செல்லப்பாவையும், ல. ச. ராவையும் மதிப்பிடத் திறனுள்ளவருக்கு மௌனியை மதிப்பிட்த்திற மற்றுப்போயிற்றா? முன்சொன்னதிலிருந்துமாறுபடுகிறார் எனில்காரணங்களுடன் வெளியில் வர வேண்டும். மறந்திருக்க எக்காரணமும் இல்லையாதலால் இதற்குப்பின்னால் வெளியிடப்படாத ஏதோ நோக்கம் இருக்கிறது என நான் சந்தேகிக்கிறேன். ஓர் இலக்கிய ஆசிரியன் வாசகனை சந்தேகிக்க வைப்பதில் தன் போலித்தனத்தை நிர்வாணமாக வெட்கப்படுமபடிக் காட்டிக்கொண்டவனாகிறான். இப்படிப்பட்டவருக்கு சாகித்ய அகாடமியை குற்றம் சாட்டும் யோக்யதை எங்கிருந்து வந்தது? ●

# அக்கம் பக்கம்

சாகித்ய அகாடமி பரிசு பற்றிய ஹேஷ்யம் பொய்த்து விட்டது. அதற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன், நிச்சயம் நீங்களும். காரணம் பரிசு கு. அழகிரிசாமி என்று அறிவிக்கப்பட்டிருப்பதுதான். பரிசு பெற்ற புத்தகம் 'அன்பளிப்பு'— சிறுகதைத் தொகுப்பு.

சாகித்ய அகாடமி பரிசு பற்றி எப்பொழுதும் சர்ச்சைகள் உண்டு. அதன் பரிசு இலக்கியவாதிகளைத் திருப்திபடுத்துவதில்லை. ஏனெனில் இலக்கியத்திற்குப் புறம்பான அம்சங்கள் பரிசுக்குத் தகுதியாக்கப்படுவதுதான்.

இந்த ஆண்டு சாகித்ய அகாடமியின் பரிசு காலமாகிவிட்ட கு. அழகிரிசாமிக்கு வழங்கப்பட்டிருக்கிறது. காலமான பிறகு பரிசு பெறும் மூன்றுவது தமிழ் எழுத்தாளர் அவர். அகாடமிக்கு எப்போது ஞானம் வருகிறதோ அப்போது அது யாருக்காவது பரிசு வழங்கும்.

இந்தமுறை அகாடமியின் பரிசைப் பெற்ற அழகிரிசாமி ஓர் அசல் இலக்கியவாதி. தமிழ்-இந்தியச்சிறுகதை உலகில் மிகவும் சிறப்பிடம் வகிக்கிறவர். இதைக்கண்டுகொள்ள அவர் காலமாக வேண்டியதிருந்தது அகாடமிக்கு. இந்தப் பரிசைப் பெறுவதால் கு. அழகிரிசாமியின் இலக்கிய மதிப்பு ஒன்றும் புதிதாக உயர்ந்து விடப் போவதில்லை. ஆனால் அசல் இலக்கியகர்த்தாவுக்குப் பரிசை வழங்கியதன் மூலமாகத் தன்னை அகாடமி உயர்த்திக் கொள்கிறது.

சிறந்த சிறுகதை எழுத்தாளராகப் பலராலும் அறியப்பட்ட கு. அழகிரிசாமி இசையும், ஓவியமும் அறிந்தவர். தமிழில் அபாரத் தேர்ச்சியும், புலமையும் கொண்டவர். இந்தப் புலமையோடு கூட அவர் நவீன இலக்கிய கர்த்தாவாகவும் இருந்ததை மிகவும் சிறப்பாகச் சொல்ல வேண்டும்.

கு. அழகிரிசாமி மிகவும் சுவாரஸ்யமான மனிதர். சளைக்காமல் இலக்கியம்பற்றிப் பேசக் கூடியவர். ஓவியத்தில் ஈடுபாடு மிகுந்த அழகிரிசாமி தன் ஓவியங்களைக் காட்டி விட்டு ஒருசமயம்சொன்னார்: "எனக்குக் கதை எழுதுகிறதைவிட படம் போட வருகிறது. அதில் முனைந்தால் எழுத்து நழுவிவிடும். அதனால் தான் படம் போட வேண்டும் போல் இருந்தால் கிறுக்கி உடனே கிழித்தெறிந்து விடுவேன்.''

'அழகிரிசாமி கதைகள்' என்ற பெயரில் சக்திவெளியீடாகவந்த புத்தகமே 'அன்பளிப்பு' தொகுப்பாக மாறியுள்ளது பழைய புத்தகத்திலிருந்த 'கல்கி'யின் முன்னுரை மட்டுமே இதில் இல்லை.

∴ ∴ ∴

'கமலாம்பாள் சரித்திரம்' எழுதிய பி. ஆர். ராஜம் அய்யர் நூற்றாண்டு விழா ஏற்பாடுகள் பற்றிய பூர்வாங்கக் கூட்டத்திற்கு நீதிபதி பி. எஸ். சோமசுந்தரம் தலைமை வகிக்க பி எஸ். ராமையா, மணிக்கொடி ஸ்ரீனிவாசன், நாரண துரைக்கண்ணன், சி. சு. செல்லப்பா, நா. பார்த்தசாரதி, சோ. சிவபாதசுந்தரம் பேசினார்கள்.

1872 ஆம் ஆண்டு பிறந்த ராஜம் அய்யர் வாழ்ந்தது இருபத்தாறு ஆண்டுகள். பாரதியின் சமகாலத்தவரான இவருக்கு நவீன தமிழ் இலக்கியத்தில் பெருமை சேர்ப்பதெல்லாம் கமலாம்பாள்சரித்திரமே. ஆனால் கூட்டத்தில் பேசிய பலர் அற்ப ஆயுளில் அவர் மறைந்திருந்தும், நரை, திரை, மூப்புடைய அய்யராகவும், வத்தலக்குண்டு வாசியாகவும் மட்டுமே காட்ட முற்பட்டார்கள்.

ராஜம்அய்யருக்குச் சிலை, தபால் தலை, மணிமண்டபம், வாசகசாலை, சொற்பொழிவு, கருத்தரங்கு இவைகளுக்கு ஏற்பாடு செய்வதோடு கூட கமலாம்பாள் சரித்திரத்தையும், ராம்பில்ஸ் இன் வேதாந்தாவையும் (Rambles in Vedanta) பதிப்பித்தல் என்றும் முடிவு செய்தார்கள்.

அடுத்தபடியாக ஒரு சந்தோஷகரமான செய்தி. தமிழில் மூன்று புதிய புத்தகங்கள் வெளிவர இருக்கின்றன. அவைகளில் முதலில் வருவது அசோகமித்திரனின் சிறுகதைத் தொகுப்பு. சந்தன்தாஸ் நந்தலால் அண்ட் சன்ஸ் சாரிடபிள் டிரஸ்ட் ஒத்துழைப்போடு புத்தகம் வர இருக்கிறது.

தற்காலத் தமிழ் இலக்கியத்திற்குப் பிரதிநிதித்துவமாக இருதொகுப்புக்கள் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக இவைகளில் சிறுகதை, புதுக்கவிதை, நாடகம், விமர்சனம், நாவலின் பகுதி எல்லாம் இடம் பெறுகின்றன. விரைவிலேயே வரவிருக்கும் இப் புத்தகங்கள் க. நா. சுப்ரமண்யத்தால் தயாரிக்கப் படுகின்றன.

ஒரு எழுத்தாளர் காலமானால் மட்டுமே அவருடைய புத்தகத்தை கி. வா. ஜகந்நாதன் விமர்சனத்திற்கு எடுத்துக் கொள்வார். உயிரோடு இருக்கிறவர்கள் புத்தகத்தை விமர்சனத்திற்கு எடுத்துக் கொள்வதில் சிலசங்கடங்கள் இருக்கின்றனவாம். என்ன சங்கடங்கள் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அவருக்குச்சில சங்கடங்கள் இருக்கின்றன. அந்தச் சில சங்கடங்களைத் தமிழ் எழுத்தாளர்கள் போக்காத படியால், சில ஆண்டுகளுக்கு முன்னால் அவர் நிகழ்த்திய கல்கி நினைவுச் சொற்பொழிவில்—தமிழ்நாவலின் தோற்றமும், வளர்ச்சியும்—என்பதில் உயிரோடு இருக்கிற எந்த எழுத்தாளரைப் பற்றியும் ஒன்றும் கூறாதது போலவே சென்ற ஆண்டு நடைபெற்ற ஸி. எல். எஸ். கருத்தரங்கில் வாசிக்கப் பெற்ற 'வரலாற்று' நாவல்களின் நோக்கமும் பயனும் என்ற கட்டுரையிலும் உயிரோடு இருக்கிற எந்த எழுத்தாளரைப் பற்றியும் குறிப்பிடவில்லை.

பயப்படுகிறவர் ஏன் பேச முன் வரவேண்டும் என்பது அதிக பிரசங்கித்தனம். அவருக்குள்ள சங்கடங்களைக் கேட்டறிந்து எழுத்தாளர்கள் அவைகளைப் போக்க முன் வரவேண்டும். அதுதான் முறை.

சாகித்யஅகாடமி,தமிழ்வளர்ச்சிக் கழகப் பரிசு, சர். சி. பி. ராமசாமி அய்யர் பதக்கம், வித்துவான் தேர்வில் முதல் பரிசு ஆகிய அனைத்தையும் ஒருங்கே பெற்றிருக்கும் வாகீச கலாநிதியின் விமர்சனப்பேச்சிலும், புத்தகத்திலும் இடம்பெற, அவரது சங்கடங்களை நிவர்த்தி செய்யும் வகையில் அமைதியாக உயிரை விட்டு விடுங்கள்.

கடைசியாகஒருவிஷயம். ஜேம்ஸ் ஜாய்ஸின் யுலிஸிஸ் (ulysses) நாவலை வெளியிட்ட தி லிட்டில ரெவ்யூ (The Little Review) இலக்கியப் பத்திரிகைக்கு இரண்டாயிரம் சந்தாதாரர்களே இருந்தார்கள். அந்தப் பத்திரிகையின் கொள்கைப் பிரகடன வாசகம் இது: "பொது மக்களின் ரசனையோடு சமரசம் செய்து கொள்ளாத பத்திரிகை— தி லிட்டில் ரெவ்யூ".

—நா. கிருஷ்ணமூர்த்தி

சென்னை, இலக்கியச் சிந்தனையின் அமைப்பாளர் ஜனவரி மாதக் கூட்டத்தில் சாகித்ய அகாடாமி பரிசு பற்றிய அறிவிப்பைச் சொல்லிவிட்டு, "காலமாகிவிட்ட, காலாவதியாகிவிட்ட எழுத்தாளர்களுக்குத்தான் சாகித்ய அகாடமி பரிசு வழங்குவதென்று ஏதாவது கொள்கையைக் கொண்டிருக்கிறதா?" என்று இயல்பாகக் கேட்டார். ஆனால் கூட்டத்திற்குத் தலைமைவகித்த சோமுவிற்குக் கோபம் வந்துவிட்டது. தன்னையும், மு. வரதராசனையும், அகிலனையும், ராஜாஜியையும் காலாவதியான எழுத்தாளர்களா? என்று கேட்டார். உண்மை தெரியாத சோமுவிற்கு நம் ஆழ்ந்த அனுதாபங்கள்.

'சாகித்ய அகாடமி பரிசு பல்வேறு சூழ்நிலையில் வழங்கப்படுகிறது. ஆகையால் ஆராய்ச்சி செய்துகொண்டிருக்கக் கூடாது. யாரோ ஒரு தமிழ் எழுத்தாளர் பரிசு பெற்றார் என்று எல்லோரும் சந்தோஷப்பட்டுக் கொள்ள வேண்டும்' — எல்லோரும் இப்படியே இருந்து விட்டால் சோமுவிற்குச் சந்தோஷமாக இருந்திருக்கும்.

அன்றைய பேச்சில் சோமு சில இடைவெளிகளைப் பற்றிக் குறிப்பிட்டார்.

ஓர் இடைவெளி:

பழந்தமிழ் இலக்கியங்களையும், காவியங்களையும் கற்றறிந்து புலமை பெற்றவர்களுக்கும், நவீன இலக்கிய கர்த்தாக்களுக்கும் உள்ள இடைவெளி. இம்மாதிரியான இடைவெளி பிற மொழிகளிலும் இருந்தாலும், தமிழில் அதிகமாக இருக்கிறது. பழந்தமிழ் இலக்கியத்தின் சுவை மிகுந்த பகுதிகளையும், மற்ற விவரங்களையும் அறிமுகப் படுத்திப் பரப்பும் முயற்சியில் திரு. டி.கே.சி. போன்றோர் முன்பு இருந்தார்கள். தற்போது அப்படிப் பட்டவர்கள் யாரும் இல்லை.

இன்னொரு இடைவெளி:

இங்கிருந்து வெளியாகும் ஆங்கில ஏடுகள் அயல் நாடுகளின் தேவைக்குத்தான் என்று எண்ணியிருந்தேன். ஆனால் நான் வெளிநாடுகள் சென்றிருந்தபோது இது தவறென்று அறிந்தேன். இங்கிருந்து வெளியாகும் பத்திரிகைகள், பத்துப் பதினைந்து நாட்கள் கழித்து, அங்கு ஒரு மொத்தமாகக் காட்சிக்கு வைக்கப்பட்டு, கவனிப்பாரற்றுப் போகின்றன. இந்தப் பத்திரிகைகள் மிகச் சாதாரண செய்திக்கு தரும் இடம்கூட தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ்ப் புத்தக விமர்சனத்திற்கும் தருவதில்லை. அப்படி ஒரு வேளை சிறிது இடம் கொடுத்தால் பத்து இருபது வார்த்தைகளை வைத்துக் கொண்டு ஒரு விமர்சனத்தை வெளியிடுகின்றன.

தற்போதைய நிலையில் ஆங்கிலத்தின் மூலமே தமிழ் வளர்ச்சியை உலகிற்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. எனவே அம்மொழியில் தேர்ச்சி பெற்றவர்கள் நல்ல முறையில் இதைச் செய்ய வேண்டும். இப்படி எழுதும் சிலர் உண்மைக்கு மாறாக எழுதினால் அதைத் திருத்தும் முறையில் சிலர் எழுதுவதும் அவசியம்.

மற்றொரு இடைவெளி:

ஆர்வத்தோடு புத்தகம் படிக்கும் பழக்கம் குறைந்துள்ளது. பழைய கதைகளை வெளியிடும் பத்திரிகைகளின் விற்பனை அதிகமாகிறது. வாசகர் மத்தியில் கனமான விஷயங்களைஏற்கும்திண்மை மிகக் குறைந்துள்ளது. இதையே காரணமாகக் கொண்டு பத்திரிகைகள் 'துண்டு துக்கடா'ச் செய்திகளைப் போட்டு நிரப்புகின்றன.

பத்திரிகை என்றதும் வியாபார நோக்கம் தவிர்க்கமுடியாததுதான். சர்க்குலேஷனை அதிகப் படுத்தவும், வாசகர்களைத் திருப்திப் படுத்தவும், மட்டமான கதைகளையும், படங்களையும் பத்திரிகைகள் வெளியிடுகின்றன.

இடைவெளி என்று மீ. ப. சோமசுந்தரம் சொல்வது தலைமுறையின் இடைவெளி(generation gap) என்றால், அது கால கட்டத்தின் தவிர்க்க முடியாத நியதி. இன்று எழுதும் இளம் தலைமுறையினர் சோமு, ராஜாஜி, அகிலன், மு. வ. போன்றவர்களை எழுத்தாளர்களாக ஏற்றுக் கொள்வதில்லை.

அகிலன் தேய பி. வி. ஆர். வருவதும். அவர் தேய சுஜாதா வருவதும் காலத்தின் நியதி. சோமுவைத் தொடர்ந்து இன்று ர. சு. நல்லபெருமாள். நாளை நல்ல பெருமாளைத் தொடர்ந்து ஒரு சின்னப் பெருமாள் வருவார்.

—ஆர். வி. சுப்ரமணியன்

---

அசோகமித்திரனின் சிறுகதைகள் கொண்ட தொகுப்பு ஒன்று ரூ. 5/- விலையில் மார்ச் மாதத்தில் வெளிவரவிருக்கிறது, இத் தொகையை

அசோகமித்திரன்
4 தாமோதர ரெட்டித் தெரு
சென்னை 17

விலாசத்திற்கு அனுப்பினால் புத்தகம் தயாரானவுடன் தபால் செலவு இலவசமாதப் பிரதி அனுப்பப்படும்.

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.